# LUXOR SUPER OFFER



# FREE!

## LUXOR COLOUR FUN BOOKS




*Buy*

**ANY OF THESE 4 DISNEY PEN SETS AND GET AN EXCITING LUXOR COLOUR FUN BOOK FREE!**




ENTER THE MAGIC WORLD OF LUXOR COLOUR. ENTER THE WORLD OF EXCITEMENT.

Luxor®

*Everyday, India writes the Luxor way.*

**Luxor Pen Company,** 5631, First Floor, Qutab Road, New Delhi-110055, Tel: 514885, Cable: HITECPEN.

CLARION D 4288

# மங்கை

மார்ச், 92

☆ இமயமலையில்

கல்லூரி மாணவிகள்

☆ மகாமகம்

(சிறப்புக் கட்டுரை—பேட்டி)

☆ காலணியைப் பாதுகாப்பது

எப்படி?

☆ சமையற்கலைப் போட்டி

மற்றும் 2 தொடர்கதைகள்

4 சிறுகதைகள்.....

மற்றும் வழக்கமான சிறப்புப் பகுதிகள்

விலை ரூ. 6/-

TA—F-1

little one a cuddles?













The
CHANDAMAMA
Collection of Soft Toys
CHANDAMAMA TOYTRONIX

# பொம்மை

திரையுலகின் நட்சத்திரப் பத்திரிகை

மாதம் ஒருமுறை மலரும்
சிறப்புமிக்க வண்ண இதழ்

நட்சத்திர பேட்டிகள்,
சிறந்த சினிமா செய்திகள்,
வண்ணப் படங்கள்,
ரசிகர்களின்
விருப்பம் போல
என்றும் புதுமையுடன்
மலரும்

பொம்மை

தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

பெரிய அளவில்,
புதிய பகுதிகளுடன்,
ஒவ்வொரு மாதமும்
வெளிவருகிறது

விலை ரூ. 6/-
வருட சந்தா: ரூ. 72-00

இது ஒரு டால்டன் வெளியீடு





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## உயர்வே உண்மைக் கடவுள்!

கடவுள் மனிதனைத் தன் உருவில் படைத்தான் என வேத புராணங்கள் கூறுகின்றன. மனிதனின் அமைப்பு ஆச்சரியமானது. உடலமைப்பு, சரியான இடங்களில் உள்ள அங்க அவயங்கள் இயங்கும் விதத்தைப் பாருங்கள். இவை சற்று இடம் மாறினாலும் மனிதனால் சரியாகச் செயல்பட முடியாது. மனிதனின் மூளைதான் எப்படி அற்புதமாய் இயங்குகிறது.

கடவுள் இவ்வாறு மனிதனைத் தன்னைப் போலப் படைத்தது அவன் சரியாகச் செயல்படவே. பம்பாயைச் சேர்ந்த ஒரு முதிய பத்திரிகையாளர் அதனால்தான் "உயர்வே உண்மைக் கடவுள். இந்த உயர் தன்மையை மனிதன் அறிவது அவன் தன்னைத்தானே அறிந்து கொள்வதே" எனப் பார்ஸி இளைஞர்களிடையே சொற்பொழிவு ஆற்றுகையில் உரைத்தார்.

மனிதன் உயர்வை அடைய அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே முயல்கிறான். இதற்கு உதவ அவனது பெற்றோர்களும், ஆசிரியர்களும், நண்பர்களும், நல்ல நூல்களும் இருந்து அவன் சமுதாயத்தில் உயர் இடத்தை அடையச் செய்கிறது. இம் முயற்சியில் மனிதன் நல்லதை நினைக்கவும் நல்லதைச் சொல்லவும் நல்லதை செய்யவும் கற்று உயர்வை அடைகிறான்.

இப்படி உயர்வதற்கு உச்ச வரம்பே இல்லை. போல் வால்ட் விளையாட்டு வீரர் செர்னீ புப்கா ஒவ்வொரு தடவையிலும் தன் முந்தைய சாதனையை மிஞ்சி உயர்வையே காட்டி வருகிறார். அவர் இன்னமும் தன் முந்தைய சாதனையை மிஞ்ச முடியும் என்று இப்போதும் கருதுகிறார். இந்த மனப் பான்மைதான் ஒவ்வொருவரிடமும் இருக்க வேண்டும். சுவாமி விவேகானந்தர் கூறினார் "உயருங்கள். உயர்ந்து கொண்டே செல்லுங்கள்." இதனை மனதில் நாம் உயர்ந்து கொண்டே செல்ல முயன்று கொண்டே இருப்போமாக.


மதிமுகம்: 90 மார்ச் 1992 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00

# பெற்ருேரின்  அக்கறை


விலங்குகளின் சரணாலயத்தில் யானைக-
ளைக் கண்டு தீபா பரவசம் அடைகிறாள்...


ஓ... சின்னது எவ்வளவு அழகு!


அப்பா, அது இங்கே வர்றது...


ஆனால்-
டொர்


அப்பா, அந்த சின்னது எங்கிட்ட வர்றதை ஏன் பெரிய யானை தடுத்திடுச்சு? நான் அதை என்ன செய்ய முடியும்?
ஆமாம்.


ஆனா, தீபா, பெற்ருேருக்கு கவலை இருக்குமே.


அம்மா யானையைவிட, நான் அதிர்ஷ்டசாலி. என் குடும்பத்தை பாதுகாக்க ஆயுள் இன்ஷ்யூ-ரன்ஸ் பாலிசி எனக்கு இருக்கு.

# ஐ. நாவின் புதிய பொதுச் செயலாளர்




எகிப்தின் முன்னாள் உதவிப் பிரதமர் திரு. பௌட்ரோஸ் காலி ஐக்கிய நாடுகள் சபையின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இந்தப் புத்தாண்டின் முதல் நாளன்று பதவி ஏற்றார். உலக அரசியல் அரங்கில் மிக முக்கிய இடம் பெறும் இப்பதவியை ஏற்றுள்ள காலியின் வயது அறுபத்தொன்பது.

எகிப்தின் அயல்நாட்டு விவகார அமைச்சராக இருந்தபோது அவர் எடுத்த சில நடவடிக்கைகளால் உலகின் கவனத்திற்கு வந்தார். 1979 -ல் எகிப்திற்கும் இஸ்ரேலுக்கும் உடன்படிக்கை ஏற்படப் பெரிதும் பாடுபட்டு 'கேம்ப்டேவிட் உடன்படிக்கை' எனப்பட்ட இதன் வாயிலாக இரு நாடுகளுக்குமிடையே பல ஆண்டுகளாக ஏற்பட்டு வந்த மோதல்களைத் தடுத்து நிறுத்தினார். மேலும் 1990 -ல் இராக் குவைட்டை ஆக்கிரமித்தபோது அரபு நாடுகள் ஒன்றுகூடி இராக்கிற்குக் கண்டனம் தெரிவித்ததும் இவரது முயற்சியால்தான். இவரது இந்த இரு நடவடிக்கைகள் உலக அரங்கில் இவரை மிகவும் உயர்த்தி மதிப்பு பெறச் செய்தன.

காலி ஐ. நா. வின் பொதுச் செயலாளராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இன்றும் உலகில் பல பகுதிகளில் மோதல்கள் ஏற்பட்டு வருகின்றன. குறிப்பாகக் கம்போசியாவிலும் யுகோஸ்லாவியாவிலும் அமைதியைக் காக்கும் பொறுப்பு ஐ. நா. வுக்கு உள்ளது. கம்போசியாவில் இருபது ஆண்டுகளாக நடந்து

பௌட்ரோஸ் காலி ஐ.நா. சபையின் ஆறாவது பொதுச் செயலாளர். ஐ.நாவின் முதலாவது பொதுச் செயலாளர் நார்வே நாட்டைச் சேர்ந்த ட்ரிக்வி லீ *(1946-52)* இரண்டாவது பொதுச் செயலாளர் ஸ்வீடனின் டாக் ஹேமர் ஷீல்ட். *(1953-61)*

வரும் உள்நாட்டு மோதல்களை நிறுத்தி சுப்ரீம் நேஷனல் கௌன்சில் தற்காலிகமாய் அமைக்கப்பட்டுள்ளது. இது தேர்தல்களை நடத்தி ஜனநாயக முறையில் அங்கு அரசு அமையப் பாடுபடும்.

யுகோஸ்லாவியாவில் ஸ்லோவேனியா, க்ரோஷியா ஆகிய குடியரசுகள் கூட்டமைப்பிலிருந்து விடுபட்டு சுதந்திர நாடுகளாகத் தம்மை அறிவித்தன. இதனால் போர்நிலை ஏற்பட்டுள்ளது. இப்பகுதியில் அமைதியை நிலைநாட்ட அமெரிக்காவும், ரஷ்யாவும், சில ஐரோப்பிய நாடுகளும் முயன்று வருகின்றன. இந்த இரு பகுதிகளையும் ஐ.நா.வின் அமைதி காக்கும் படைகள் ஏற்கனவே அடைந்து விட்டன.

உலகில் ஆங்காங்கு ஏற்படும் மோதல்களைத் தடுத்து அமைதியை நிலைநாட்டுவது ஐ.நாவின் முக்கிய குறிக்கோள்களில் ஒன்றாகும். இப்போதைய பொதுச்செயலாளருக்கு மேலும் ஒரு பொறுப்பை ஏற்க வேண்டியுள்ளது. ஐக்கிய நாடுகளின் மறு அமைப்பு விதிகளில் திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென நெடுங்காலமாகக் குரல் எழுப்பப்பட்டு வருகிறது. ஐ.நா. பாதுகாப்பு சபையில் ஜெர்மனிக்கும் ஜப்பானுக்கும் நிரந்திர இடம் அளிக்கப்பட வேண்டும் என வற்புறுத்தப்படுகிறது. நம் நாட்டில் முன்பு அமெரிக்க தூதராக இருந்த பேட்ரிக் மோனிஹான் இந்தியாவிற்கு ஐ.நா. பாதுகாப்பு சபையில் நிரந்திர இடம் அளிக்க வேண்டும் என்று கூறிவருகிறார்.

தன்னை ஐ.நாவின் பொதுச் செயலாளராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் என்ற செய்தியைக் கேட்டதும் திரு. காலி "இது எனக்கும் என் நாட்டிற்கும் அளிக்கப்பட்ட உயர் மதிப்பாகும் என்றே கருதுகிறேன். உலகில் எவ்வளவோ மாற்றங்கள் ஏற்பட்டு வரும் இந்த சூழ்நிலையில் ஐக்கிய நாடுகள் சபை மிகச் சிறந்த பொறுப்பை ஏற்றுச் செயல்பட்டாக வேண்டும். நான் என் கடமையைச் செய்வதில் என் முழு சக்தி கொண்டும் பாடுபடுவேன்" எனக் கூறினார்.

***ஐக்கிய நாடுகள் சபை 1945-ல் நிறுவப்பட்டபோது அதில் 51 நாடுகளே உறுப்பினர்கள். ஆனால் இன்றோ 166 உறுப்பினர்கள் உள்ளனர். சென்ற செப்டம்பரில் பால்டிக் குடியரசுகளும் வட, தென் கொரியாக்களும், பசிபிக் தீவு நாடுகளான மைக்ரோனேஷியா, மார்ஷல் தீவுகளும் புதிய உறுப்பினர்களாக ஏற்கப்பட்டனர்.***



# முதியோர் இல்லமே சரி!

**கோ**வையின் புறநகரான ராம் நகரில் ரங்கசாமி என்ற அரசாங்க அதிகாரி தன் மனைவி மாலாவுடன் வசித்து வந்தான். அவன் அரசாங்க அலுவலாக அடிக்கடி வெளியூர் போகிறவன். அதனால் தான் இல்லாதபோது எச்சரிக்கையாக இருக்கும்படி மாலாவிடம் கூறிவிட்டுக் கிளம்புவான். அப்படி ஒருமுறை கூறிவிட்டு அவன் வெளியூர் சென்றான்.

அன்று மாலை இருட்டும் போது அவள் வீட்டு வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து ஒரு கிழவர் தம் பெட்டியுடன் இறங்கினார். அவர் வண்டிக்காரனிடம் "இதோ பார். நான் ஊருக்குள் இப்போது போகவில்லை. இது என் தம்பியின் வீடு. இங்கே தங்கிவிட்டு நாளை போகிறேன். அதற்காக நான் உன்னிடம் பேசிய வண்டி வாடகையைக் குறைக்காமல் அப்படியே கொடுக்கிறேன்" என்று கூறிப் பணத்தைக் கொடுத்து அனுப்பிவிட்டார்.

மாலா கிழவர் சொன்னதைக் கேட்டு திகைத்துப் போனாள். தன் கணவருக்கு அப்படி ஒரு அண்ணன் இருக்கிறார் என்று அவளுக்குத் தெரியாது. அவரைப் பற்றி அவளது கணவனும் கூறி இருக்கவில்லை. எழுபது வயதில் ஒல்லியான உடலுடன் வீட்டினுள் நுழைந்த அவரைப் பார்த்து "நீங்கள் என் கணவரின் தமையனா? அவர் அப்படி ஒருவர் இருப்பதாகக் கூறவில்லையே. வீடு தவறி வந்துவிட்டீர்களா?" என்று கேட்டாள்.

கிழவரும் அங்கிருந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தவாறே "எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். நான் வேண்டுமென்றே

—பாபநாசம் சாமா—



உன் கணவனின் தமையன் என்று கூறி அந்த வண்டிக்காரனை அனுப்பி விட்டேன். அவனைப் பார்த்தால் நடுவழியில் என்னை அடித்துப் போட்டுவிட்டு என் பெட்டியைப் பிடுங்கிக் கொண்டு போய் விடு வானோ என்ற பயம் ஏற்பட்டது. அதனால் ஒரு பொய்யைச் சொல்லி இங்கே இறங்கினேன். இன்றிரவை இங்கே கழித்து விட்டு நாளைக்கு காலை போய் விடுகிறேன்'' என் றார்.

கிழவரின் நிலை கண்டு மாலா வின் மனம் இரங்கியது. அவளும் ''சரி. அப்படியே செய்யுங்கள். இங்கேயே சாப்பிடலாம்'' எனக் கூறி சட்டென ஒரு வத்தல் குழம்பு வைத்து வடாம் பொரித்து அவருக்கு சாப்பாடு போட்டாள்.

கிழவரும் அதைச் சாப்பிட்ட பின் மாலாவை அழைத்து தன் பெட்டியைத் திறந்து காட்டி ''இதில் அறுபது பவுன் பெறும் தங்க ஒட்டியாணமும் நாற்பது பவுன் காசுகளும் உள்ளன. இவற்றை எப்படி என் மூன்று மரு மகள்களுக்குப் பங்கு போட்டுக் கொடுப்பது? யாராவது ஒருத்திக் குத்தான் அறுபது பவுன் ஒட்டி யாணத்தைக் கொடுக்க முடியும். மற்ற இருவருக்கும் இருபது பவுன்காசுகள் வீதம் கொடுப் பேன். யார் என் மீது அதிக அன்பு கொண்டிருக்கிறாளோ அவளுக்குத் தான் ஒட்டியாணம். அதை எப் படிக் கண்டு பிடிப்பது? இதுதான் பிரச்னை'' என்றார்.

அப்போது மாலா ''உங்கள் மகன்களுக்கு எதுவும் கொடுக்க வில்லையா?'' என்று கேட்கவே அவரும் ''என்னைப் பற்றி விவர மாகச் சொல்கிறேன் கேள்'' என்று ஆரம்பித்தார்.

''என் பெயர் அருணாசலம். எனக்கு மூன்று மகன்கள். மூவருக் கும் கல்யாணமாகி இப்போது இந்த ஊரில் வியாபாரம் செய்கிறார் கள். என் மனைவியும் ஐந்து வரு டங்களுக்கு முன் இறந்து விட்டாள். என் மகன்கள் வியாபாரத்திலேயே பணம் போட விரும்பியதால் கிராமத்திலிருந்த என் வீட்டையும்

என் வயல்களையும் விற்று அந்த பணத்தை அவர்களிடம் கொடுத்து விட்டேன். இப்போது என்னிடம் மிஞ்சியது இந்தத் தங்க ஒட்டி யாணமும் பவுன் காசுகளுமே. இவை தமக்குக் கிடைக்கும் என்பதை என் மூன்று மருமகள்களும் அறிவார் கள். அதுவும் இந்தத் தங்க ஒட்டி யாணத்தை அடைய அவர்கள் போட்டி போடுகிறார்கள் என்றே நினைக்கிறேன். இதுவரை அவர் கள் என்னை நன்றாகவே கவனித்து வந்திருக்கிறார்கள். அவர்களில் யாருக்கு என்மீது பாசம் எனக் கண்டு அவளுக்கு இந்த ஒட்டியா ணத்தைக் கொடுத்துவிட்டு என் மகன்களோடும் மருமகள்களோடும் என் வாழ்நாட்களைக் கழிக்க நினைக்கிறேன்.''.

இதைக்கேட்ட மாலா சிரித் தாள். அதுகண்டு கிழவர் ''ஏன் சிரிக்கிறாய் அம்மா?'' என்று கேட் டார். அவளும் ''நீங்களோ வீடு வயல்களை விற்று உங்கள் மகன் களுக்குக் கொடுத்து விட்டீர்கள். மிஞ்சி இருப்பது இந்தத் தங்க நகையும் பவுன்காசுகளுமே. இவற் றையும் நீங்கள் கொடுத்துவிட் டால் உங்களிடம் ஒரு பைசாக்கூட இராது. அந்த நிலையில் உங்களை உங்கள் மகன்களும் மருமகள்களும் மதிப்பார்களா? அவர்கள் உங்க ளைத் தங்களோடு வைத்துக் கொண்டு சாப்பாடு போடுவார்களா



என்பது சந்தேகமே. இதற்கு உதா ரணம் என் தந்தை அவர் தம் மிடம் உள்ள பணத்தை எல்லாம் தன் இருமகன்களுக்கும் கொடுத்து விட்டார். அவர் தனக்கென எது வும் வைத்துக்கொள்ள வில்லை. அந்த நிலையில் அவரை வீட்டை விட்டு விரட்டி விட்டார்கள் அவரது மகன்களும் மருமகள் களும். நான் அவரை என் வீட்டில் வந்து இருக்கும்படி வேண்டி னேன். அவரோ இரண்டு மகன் கள் வசதியாக இருக்கையில் தான் மகளின் வீட்டில் இருப்பது அவ மானம் எனக்கூறி முதியோர் இல்லத்தில் சேர்ந்து விட்டார். இந்த அன்பு, பாசம் என்பது எல் லாம் பணத்திற்கு முன்னால் பஞ்



சாய்ப் பறந்துவிடும். அதனால் நீங்கள் உங்களிடம் கடைசிவரை இவற்றை வைத்துக் கொண்டிருங்கள். அப்போதுதான் உங்களுக்கு மதிப்பு. இல்லா ·விட்டால் என் தந்தையைப் போலத் திண்டாடி நீங்களும் முதியோர் இல்லத்தில் சரண்புக வேண்டித்தான் வரும்" என்றாள்.

கிழவரும் "சேச்சே! என் மகன்களும் மருமகள்களும் அப்படி இருக்க மாட்டார்கள். என்மீது பாசம் கொண்டவர்கள்" என்றார். மாலாவும் "அதைப் பரீட்சித்துப் பார்த்துவிடலாம். நான் சொல்கிறபடி செய்கிறீர்களா?" எனவே கிழவரும் சரி என்றார். மாலா ஒரு திட்டத்தைக்கூறி அவரை ஒரு பத்திரம் எழுதிக் கொடுக்கச் சொன்னாள்.

மறுநாள் காலை அவள் அருணாசலத்தை ஒரு அறைக்குள் படுக்க வைத்துவிட்டு மேலே ஒரு வெள்ளைத் துணியைப் போர்த்தி "நீங்கள் பேச்சுமூச்சு இல்லாமல் இங்கேயே படுத்திருங்கள். யார் என்ன சொன்னாலும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருங்கள். நான் இன்னும் சற்று நேரத்தில் உங்கள் மூன்று மருமகள்களையும் வரவழைத்துப் பேசப் போகிறேன். அதை கவனமாக கேளுங்கள்" என்றாள். கிழவரும் மாலா சொன்னபடியே படுத்தார்.

மாலா ஒரு ஆளை அனுப்பி அருணாசலத்தின் மூன்று மருமகள்களையும் அழைத்துவரச் சொன்னாள். அவர்களும் ஒரு வண்டியில் வந்தனர். அவர்கள் மாலாவிடம் "யாரம்மா நீ? எங்களை ஏன் அவசரமாக வரச் சொன்னாய்?" என்று கேட்டார்கள். மாலாவும் "உங்கள் மாமனார் அருணாசலம் நேற்றிரவு வழியில் உடல் நலம் குன்றவே அவரைக் கண்ட என் கணவர் இங்கு அழைத்து வந்தார். என் கணவர் அரசாங்க நீதிபதி. உங்கள் மாமனார் தான் இனி பிழைக்க முடியாது என்று கூறி உயில் எழுதி என் கணவரிடம் கொடுத்தார். இன்று காலையில் அருணாசலம் இறந்துவிட்டார்" என்றாள்.

மருமகள்கள் மூவரும் அடுத்த அறையை எட்டிப்பார்த்து அங்கு தம் மாமனாரின் உடல் இருப்பதைக் கண்டனர். கூடவே அவர்கள் "நாங்கள் நேற்றிரவு இவரைத் தங்க ஒட்டியாணத்துடனும் பவுன் காசுகளுடனும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். அவற்றை யார் யாருக்கு கொடுக்கும்படி எழுதி இருக்கிறார்? உயிலைப் படியுங்கள்" என்றார்கள் ஆசையுடன் ஆவலும் ததும்ப.



மாலாவும் உயிலைப் படித்தாள். அதில் அருணாசலம் தனக்குச் சொந்தமான தன் மனைவியின் அறுபது பவுன் ஒட்டியாணமும், நாற்பது பவுன் காசுகளும் அவ்வூர் முதியோர் இல்லத்திற்கு நன்கொடையாக அளிப்பதாக எழுதப்பட்டிருந்தது. அதைக் கேட்ட மூத்த மருமகள் "என்ன அநியாயம்! இந்த கிழத்திற்கு மூன்று வேளையும் வாய்க்கு ருசியாய் சமைத்துக் கொட்டினேனே. எதற்கு? தங்க ஒட்டியாணம் எனக்குக் கிடைக்கும் என்றுதானே! என் ஆசையில் மண்ணைப் போட்டுவிட்டதே இந்தக் கிழம்! அதற்கு பதிலாக இதைப் பட்டினி போட்டு சாகடித்திருக்கலாம்" என்று கத்தினாள் ஆத்திரத்தோடு.

இரண்டாவது மருமகளோ "இவருக்கு தினமும் உடம்புதேற வேளாவேளைக்கு மருந்து கொடுத்தேனே. அதற்கு பதில் இப்படியா இந்த கிழவர் துரோகம் செய்தார்? இப்படிச் செய்வார் என்று தெரிந்திருந்தால் விஷத்தை அவருக்குக் குடிக்கக் கொடுத்திருப்பேனே" என்றாள் பல்லைக் கடித்தவாறே.

மூன்றாவது மருமகளோ "இவர் கைகால் வலிக்கிறது என்றதும் ஓடிப்போய் பிடித்துவிட்டேனே. இப்படி எனக்கு எதுவுமே கொடுக்காமல் போய்விடுவார் என்று தெரிந்திருந்தால் அவர் கழுத்தைப் பிடித்து அமுக்கிக் கொன்றிருப்பேனே. பாவி. என்னை ஏமாற்றி விட்டானே" என்று புலம்பினாள்.

அப்போது மாலா "அதுசரி.

உங்கள் கணவன்களிடம் சொல்லி இந்த உடலை எப்போது உங்கள் வீட்டிற்கு எடுத்துப்போகப் போகிறீர்கள்?" என்று கேட்டாள். அவர்களோ "எங்கள் வீட்டிற்கு எடுத்துப்போவதா? இவரை எங்களோடு வைத்து சாப்பாடு போட்டு மருந்து வாங்கிக் கொடுத்ததெல்லாம் தண்டச் செலவு என்று அவர்கள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் தாம் தங்க ஒட்டியாணமும் பவுன்காசுகளும் எங்கள் கைக்கு வரும்வரை பொறுமையாக இருக்கும்படி சொல்லி வந்தோம். இப்போதோ ஒன்றும் கிடைக்காது என்று தெரிந்து போயிற்று. அவர்கள் இந்த கிழவருக்கு ஈமச்சடங்குகள் செய்ய ஒரு காசுகூடச் செலவு செய்யமாட்டார்கள். இங்கே வரவும் மாட்டார்கள். ஊரார் ஒரு அனாதைக்கு கோவிந்தாக் கொள்ளி போடுவது போல யாராவது போடட்டும். எங்களுக்கு என்ன தலைவிதியா?" என்று சொல்லிவிட்டு தாம் வந்த வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டு போய்விட்டார்கள்.

அவர்கள் போனபின் அருணாசலம் எழுந்து அறையிலிருந்து வெளியே வந்தார். அப்போது மாலா "பார்த்தீர்களா பாசம் பட்ட பாட்டை! இனியாவது உங்கள் நகையையும் பவுன்காசுகளையும் பத்திரமாக வைத்துக் கொண்டு இருங்கள். இனி இந்தப் பத்திரத்திற்கு அவசியம் இல்லை" என்று கூறி அதைக் கிழிக்கப் போனாள்.

அருணாசலம் அவளைத் தடுத்து "அதைக் கிழிக்காதே. அதை என்னிடம் கொடு. அதையும் இந்த நகையும் பவுன் காசுகளையும் முதியோர் இல்லத்தில் கொடுத்துவிட்டு நானும் அங்கேயே போய் இருந்து விடுகிறேன். அதன் முகவரியைக் கூறு" என்றார் கவலை விட்டவராக.






## 12

*[இளவரசியின் ரத்தின மாலையிலுள்ள சந்திரகாந்தக் கல்லை அபகரிக்க ருத்திரபுரி முதலமைச்சனும் மந்திரவாதி வீரவிகடனும் திட்டமிட்டார்கள். இதுபற்றி வீரவிகடன் மந்திரக்கிழவியிடம் கூறவே அவன் இளவரசியைக் கவர்ந்து வந்து தன்னிடம் ஒப்படைக்குமாறு கட்டளை இட்டான். விநோதன் இவற்றை எல்லாம் மறைந்திருந்து பார்த்தும் கேட்டுக் கொண்டும் இருந்தான். அதன் பிறகு—]*

அந்த ஆண்டில் மழை சரியாகப் பெய்யாததால் ருத்திரபுரி நாட்டில் பயிர் நன்றாக விளைந்தது. மக்களும் எவ்விதக் குறையும் இல்லாமல் மகிழ்ச்சியுடன் இருக்கவே, மன்னன் இளவரசியின் பிறந்த நாள் விழாவை விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடுகளை செய்ய விரும்பினான். அது கண்டு முதலமைச்சன் "நாம் இந்த விழாவை இதுவரை யாரும் கொண்டாடி இராத விதத்தில் மிகச் சிறப்பாக நடத்திக் காட்ட வேண்டும்" என்று மிகுந்த உற்சாகத்துடன் கூறினான். அவன் அவ்வாறு கூறியது இராஜ குடும்பத்தின்பால் அவன் வைத்திருக்கும் அபார விசுவாசம் என்று மன்னன் தவறாக நினைத்து விட்டான்.

ஒருநாள் இரவு கருமேகங்கள்



சூழ்ந்து எங்கும் ஒரே இருட்டாக இருந்தது, மழையோடு இடியும் மின்னலுமாக இருந்தது அந்த மழையிலும் வீரவிகடன் கருப்பு ஆடைகளை அணிந்து தன் வாகனமாகிய கரடியின் மீது அமர்ந்து காட்டிலிருந்து ருத்திரபுரியை நோக்கிச் சென்றான். ருத்திரபுரியின் எல்லையில் தான் புகழ்பெற்ற காளி கோவில் இருந்தது. அது பெயர் பெற்றிருந்த போதிலும் அங்கு பூஜை செய்ய வருவோர் மிகக் குறைவே அதுவும் இரவு வேளையின் போது யாருமே வரமாட்டார்கள்!

அந்தக் கோவிலின் பூசாரி மட்டும் காலையிலும் மாலையிலும் வந்து கோவிலில் விளக்கை ஏற்றிவிட்டுப் போய் விடுவான். காளிக்குப் பூஜை செய்ய வேண்டுமானால் முன் கூட்டியே சொன்னால் தான் அவன் அங்கே இருப்பான் அந்தக் காளி அம்மன் அரச குடும்பத்தின் குல தெய்வம். அரச குடும்பத்தினர் தம் பிரார்த்தனைகளை நிறைவேற்ற அங்கு அவ்வப்போது செல்வார்கள். கோவிலிலிருந்து சற்று தூரத்தில் ஒரு பெரிய ஆல மரம் இருந்தது.

வீரவிகடன் அந்த மரத்தருகே வந்ததும் கரடியை நிறுத்திக் கீழே இறங்கினான். அதனை அங்கேயே இருக்குமாறு கூறிவிட்டு அவன் காளிகோவிலை நோக்கி நடந்தான். கோவில் வாசலில் நின்ற உருவத்திடம் அவன் "வந்து சேரச் சற்றுத் தாமதமாகிவிட்டது. மந்திரக் கிழவியைப் பார்த்து பேசிவிட்டு வந்தேன். அவள் உனக்கு ஒரு தாயத்து கொடுத்திருக்கிறாள். நீ அதைக் கட்டிக் கொண்டால் உனக்கு எவ்விதத் துன்பமும் வராது. நீ எந்த தீயசக்திக்கும் பயப்படாமல் கவலையற்று இருக்கலாம்" என்றான்.

முதலமைச்சனும் "மிக்க நன்றி உன் இந்த உதவியை நான் மறக்கவே மாட்டேன்" என்றான். அப்போது வீரவிகடன் தன் பையிலிருந்த தாயத்தை எடுத்து முதலமைச்சனின் மணிக்கட்டில் கட்டினான். உண்மையில் அந்தத் தாயத்தை

முதலமைச்சன் கட்டிக் கொண்டால் அவன் வீரவிகடன் சொல்கிறபடி நடப்பான். இதை மந்திரக்கிழவி மந்திரவாதிக்குக் கூறி இருந் தாள். அதை முதலமைச்சன் அறிய வில்லைதான். தாயத்து கட்டப் பட்டதும் அவனது உற்சாகம் பெரு கியது.

முதலமைச்சனும் "இளவரசி யின் பிறந்தநாளன்று அவள் இந் தக் கோவிலுக்கு வந்து காளியை தரிசிக்க வேண்டிய நல்ல நேரத்தை யும் குறித்துக் கொடுத்து விட்டேன். சூரியன் மேற்கே மறைந்து ஒரு மணி நேரம் கழித்ததும் இங்கே அவள் வருவாள். அதுதான் நான் குறித் துக் கொடுத்த நேரம்" என்றான்.

அப்போது வீரவிகடன் "அன் றிரவும் இன்றிரவைப் போல இருட் டாக இருக்க வேண்டும். எல்லாம் நாம் திட்டமிட்டபடி நடந்தால் நம் இலட்சியம் இன்றிலிருந்து சரியாக ஒரு மாதம் கழிந்ததும் நிறைவேறி விடும்" என கூறியவாறே தன் தாடி யைத் தடவிக் கொண்டு நிமிர்ந்து பார்த்தான்.

முதலமைச்சனும் "நண்பா! நீ திட்டம் போட்டால் அது கண்டிப் பாக நிறைவேறிவிடும் என்பதில் எனக்கு எள்ளவும் சந்தேகமே இல்லை. இந்தக் கோவிலின் கத வைத் திறக்க சாவியும் கொண்டு வந்திருக்கிறேன். அரச குடும்பத்தின ருக்கு ஏதாவது ஆபத்து வந்தால்



அவர்கள் தப்பிச் செல்ல இந்தக் கோவிலிருந்து காட்டிற்குள் போய் விட ஒரு இரகசிய சுரங்கப்பாதை உள்ளது. அந்த சுரங்கத்தின் நுழை வாசல் கர்ப்பகிருகத்தில் உள்ளது. அதை எப்படித் திறந்து மூடுவது என்பது எனக்குத் தெரியும். இது வரை அந்தப் பாதையை யாரும் உபயோகித்தது இல்லை. ஏனெ னில் அப்படி ஒரு சந்தர்ப்பம் ஏற் படவில்லை. இப்போது நமக்கு இது பயன்படும். வா, உள்ளே போய்ப் பார்க்கலாம்" என்றான்.

வீரவிகடனும் பார்க்கலாமே எனவே முதலமைச்சன் அவனை அழைத்துக் கொண்டு கோவிலுக் குள் சென்றான். உள்ளே போனதும் கோவில் கதவை மூடிவிட்டு சிறு



தீவட்டியை ஏற்றி கர்ப்பக் கிரகத்திற்குச் சென்றான். அவர்களை ஆரம்ப முதல் கண்காணித்து வந்த விநோதனும் அவர்கள் பார்க்காத படியே அவர்களின் பின்னால் சென்றான்.

காளி விக்கிரகத்தின் முன் பூசாரி ஏற்றி வைத்துவிட்டுப் போன சிறுமண் அகல் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. காளி விக்கிரகத்திற்குப் பின்னால் உள்ள சுவர் வேலைப்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில் ஒரு ராட்சஸனின் சிலை இருந்தது. அதன் வாயை முதலமைச்சன் திறந்தான். அது சுரங்கப்பாதைக்குப் போக வழி விட்டது. முதலமைச்சனும் மந்திரவாதியும் சுரங்கப்பாதைக்குள் சென்றனர். அதுவரை அவர்களைப் பின் தொடர்ந்து வந்த விநோதன் அவர்களைப் பின் தொடராமல் அவர்கள் வெளியே வரும் வரை காத்திருந்தான்.

கொஞ்ச நேரத்திற்குப் பின் முதலமைச்சனும் மந்திரவாதியும் சுரங்க பாதையிலிருந்து திரும்பி வந்தார்கள். அவர்கள் கோவிலை விட்டு வெளியே செல்ல விநோதனும் வெளியே வந்து விட்டான் வெளியே வந்த முதலமைச்சன் கோவிலின் கதவை மூடிப் பூட்டி விட்டு மந்திரவாதியிடம் "நான் இளவரசியுடன் கோவிலுக்கு வந்து கர்ப்பகிருகத்திற்குள் அழைத்துச் செல்வேன், அப்போது சுரங்க வாசலைத் திறந்து அவளை அதற்குள் தள்ளி விடுவேன். நீ சுரங்கத்துள் தயாராகக் காத்திருக்க வேண்டும். இளவரசி உள்ளே தள்ளப் பட்டதும் நீ அவளைப் பிடித்துக் கொண்டு சுரங்கப்பாதை வழியாகச் சென்று காட்டிற்குள் போய் விடு. அங்கே உன் ஆட்கள் தயாராக நின்று அவள் வந்ததும் அவளைத் தூக்கிக் கொண்டு போய் மந்திரக் கிழவியிடம் ஒப்படைத்து விடலாம்" என்றான்.

மந்திரவாதியும் "அங்கே மந்திரக் கிழவியே வந்து காத்திருப்பாள். அவளே இளவரசியைப் பிடித்து இழுத்துக் கொண்டு தன் இருப்பிடத்திற்குச் செல்வாள்" என்றான்.



முதலமைச்சனும் "சபாஷ்! ஆனால் இவை எல்லாம் நாம் திட்டமிட்ட படி அந்தந்த நொடியில் நடக்க வேண்டும். கொஞ்சம்கூடத் தாம தம் ஏற்படக் கூடாது. ஏனென் றால் வெளியே மக்கள் விழாக் கொண்டாட்டங்களில் மூழ்கி இருப் பார்கள். அந்தச் சிறிது நேரத்தில் இளவரசியை கவனிக்க மாட்டார் கள். இளவரசி எப்படியோ காணா மல் போய் விட்டாள் என்பது அவர் களுக்குத் தெரியும் போது அவள் காட்டில் மந்திரக் கிழவியிடம் அகப் பட்டிருப்பாள். எனவே எல்லாம் குறித்த நேரத்தில் நடக்க வேண்டும். தெரிந்ததா?" என்றான்.

மந்திரவாதியும் "எல்லாம் சரி யாக நடக்கும். இளவரசி மாயமாய் மறைந்தாள் என்றே எல்லோரும் திகைத்து நிற்பார்கள். கோவிலி ருந்து காட்டிற்குள் போகும் சுரங்கப் பாதை பற்றி யாருக்குத் தெரியும்? உனக்கு மட்டும் தானே" என்றான் சிரித்தவாறே.

முதலமைச்சனும் "மன்னனுக் கும் ராணிக்கும் கோவில் பூசாரிக் கும் சேனாதிபதிக்கும் இந்த சுரங்கப் பாதை இருப்பது தெரியும். வேறு யாருக்கும் தெரியாது. இவர்கள் ஒரு வேளை அந்தப் பாதையில் போய்த் தேடுவதற்கு முன் நம் திட்டப் படி மந்திரக்கிழவியுடன் இளவரசி கிழவியின் குகைக்குக் கொண்டு செல்லப்பட்டு விடுவாளே" என் றான்.

மந்திரவாதியும் "ஓ! அப்படி யானால் கோவில் பூசாரி நாம் செய்வதைப் பார்த்து மன்னனிடம் அதைக் கூறிவிடலாம் என்று பயப் படுகிறாயா?" என்று கேட்டான்.

முதலமைச்சனும் "ஆமாம். அந்த அபாயம் இருக்கத்தான் இருக் கிறது. அதைத் தவிர்க்க ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டும்" என் றான்.

மந்திரவாதியும் "அப்படியா னால் இளவரசி இங்கு வருவதற்கு முன்பே அந்தப் பூசாரியைப் பிடித் துக் கொன்றுவிட வேண்டும். பிறகு நானே பூசாரி போல வேடம் போட்டுக் கொண்டு கோவிலுக்கு வந்து இளவரசியுடன் சுரங்கப்

பாதைக்குள் போய் விடுகிறேன். அந்தத் திறக்கவும் மூடவும் எனக்கு நீதான் சொல்லிக் கொடுத்திருக் கிறாயே'' என்றான்.

முதலமைச்சனும் "ஆமாம் நீ யும் அவள் உன்னை நம்பும் விதத் தில் இனிமையாகப் பேசிச் சுரங் கத்தில் கொண்டு போய் விடு. அதன்பிறகு எல்லாம் திட்டப்படி நடக்கும். ஆனால் எனக்கு ஒரு விஷ யம் தான் மனதை உறுத்துகிறது'' என்றான்.

மந்திரவாதியும் "என்ன அது?'' என்று கேட்கவே, முதலமைச்சனும் "இதற்காகக் கோவில் பூசாரியைக் கொல்லத்தான் வேண்டுமா? அவ னைக் கொல்லாமல் வேறு ஏதா வது செய்ய முடியுமா? ஏனென் றால் பூசாரி மிகவும் நல்லவன், தர் மாத்மா'' என்றான்.

அப்போது மந்திரவாதி "நீ இப்படி எல்லாம் இரக்கப்பட்டுக் கொண்டே போனால் சக்கரவர்த்தி யாகி உலகை ஆளுவது எப்படி? சந்திரகாந்த வைரம் நம் கைக்கு வர வேண்டும். உம்... சரி நீ சொன்னது போலப் பூசாரியைக் கொல்லாமல் அவனை இரகசிய மாகச் சிறை வைத்து விடலாம். போதுமா? இனி நான் போக லாமா?'' என்று கூறி ஆலமரத்தை நோக்கி நடக்கலானான். முதல மைச்சனும் அவனை அனுப்பி விட்டு அங்கிருந்து தலைநகரை நோக்கிச் சென்றான்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த விநோதன் அவர் களை மேலும் பின் தொடர வில்லை. ஏனென்றால் அவர்களது சதிதிட்டம் தான் அவனுக்குத் தெரிந்துவிட்டதே. அதனால் உட னேயே மன்னன் விசுவவர்மனுக் குத் தெரிவித்து விட்டால் அப்போது அந்தச்சதி நடக்காமல் செய்து விட முடியும். அதனால் மன்னனை எப்படி எச்சரிப்பது என்று அவன் யோசிக்கலானான்.

(தொடரும்)



## பிழைத்துக் கொள்வான்!

மகாலிங்கம் தன் இரு பேரன்களையும் வளர்க்க வேண்டியதாயிற்று. ஏனெனில் அவனது மகனும், மருமகளும் திடீரென இறந்து விட்டார்கள். அச்சிறுவர்களின் போக்கைக் கண்டு அவர்களை எப்படி நல்ல விதமாய் முன்னுக்குக் கொண்டு வருவது என்று அவன் கவலைப்படலானான்.

ஒருநாள் அவன் தன் நண்பன் சிவசாமியிடம் தன் பேரன்களைப் பற்றி கூறவே அவனும் "கவலைப்படாதே. அவர்களை எப்படி நல்வழிப்படுத்துவது என நான் கண்டு கூறுகிறேன்" என்றான். பிறகு சிவசாமி மகாலிங்கத்தின் இரு பேரன்களையும் அழைத்து "நான் ஒரு கேள்வி கேட்கப் போகிறேன். நன்கு யோசித்து உங்களில் யார் சரியான பதில் சொல்கிறானோ அவனுக்குப் பத்து ரூபாய் கொடுப்பேன்" என்றான்.

அவர்களும் கேளுங்கள் எனவே சிவசாமியும் "கடவுள் உங்கள் முன் தோன்றி ஒரே வரம் கேட்கச் சொன்னால் நீங்கள் சுகமாக வாழ என்ன கேட்பீர்கள்?" என்று கேட்டான். பேரன்களில் மூத்தவன் "நான் என்றென்றும் சுகமாக வாழ செழிப்பான வயல்கள் கொடுக்கும்படிக் கேட்பேன்" என்றான். இளையவனோ "எனக்கு வயலெல்லாம் வேண்டாம். நான் எதை விரும்பினாலும் அதை எனக்குக் கொடுக்கக் கூடிய ஒரு மந்திர மோதிரம் கொடுக்குமாறு கேட்பேன்" என்றான்.

சிவசாமி புன்னகை புரிந்து பத்து ரூபாயை இளையவனுக்கே கொடுத்தான். பிறகு அவன் மகாலிங்கத்தைக் கண்டு "உனக்குள்ள ஒரே வீட்டை உன் மூத்த பேரனுக்குக் கொடு. அவன் இந்த ஊரில் இருந்து எப்படியாவது வாழ்க்கை நடத்துவான். இளையவனைப் பற்றிய கவலை வேண்டாம். அவன் எப்படியாவது எங்கிருந்தாலும் பிழைக்க வழி தேடிக்கொள்வான்! அவனை என்னோடு அழைத்துப்போய் ஏதாவது ஒரு தொழிலைக் கற்றுக் கொடுக்கிறேன்" என்றான்.

மகாலிங்கமும் சிவசாமி கூறியபடி செய்து தன் பேரன்களின் எதிர்காலம் பற்றிய கவலையை விட்டொழித்தான்.





# யார் பண்பற்றவன்?

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்தப் பயங்கர நள்ளிரவில் நீ இப்படிப் பாடுபடுவதைப் பார்த்தால் நீ யாருக்கோ ஏதோ வாக்குக் கொடுத்திருக்கிறாய் என்று தெரிகிறது. உன்னைப் போல ஒரு மன்னனும் வாக்குக் கொடுத்தான். அவனது கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள். உனக்கும் சிரமம் தெரியாமல் இருக்கும்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

மானகிரி என்ற நாட்டை மானசிம்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது தலைநகருக்

## வேதாளம் சொல்லும் கதை



குச் சற்று தூரத்திலிருந்த ஒரு காட்டில் ஒரு பயங்கர மிருகம் இருந்தது. அது யாருக்கும் அகப் படாமலும் சுற்றுப்புற கிராம மக் களை பயமுறுத்தி சிலரைக் கொன் றும் சில சமயங்களில் தலைநக ரில் புகுந்து மக்களை பயமுறுத்தி யும் வந்தது. அதனைப் பிடிக்க மன்னன் எவ்வளவு முயன்றும் முடியாது போயிற்று.

இதற்கு என்ன செய்யலாம் என்று மன்னன் தன் மந்திரியையும் இளவரசியையும் அழைத்து யோசனை செய்து முடிவில் அந்த பயங்கர மிருகத்தைக் கொல்பவனுக்குத் தன் நாட்டில் பாதியைத் தந்து தன் மகளையும் அவனுக்குக் கல்யாணம் செய்து வைப்பதாக மன்னன் பறை சாற்றுவித்தான்.

இந்த அறிவிப்பைக் கேட்டுப் பல வீர இளைஞர்கள் அந்த மிரு கத்தைப் பிடிக்கக் காட்டிற்குள் சென்றனர். ஆனால் அவர்களில் ஒருவன்கூட உயிருடன் திரும்பி வர வில்லை. ஏனெனில் அந்த பயங் கர மிருகம் தன்னைப் பிடிக்க வந்த வர்களை எல்லாம் தாக்கிக் கொன்று விட்டது.

ஒருநாள் அந்நாட்டின் காட்டு வாசிகளின் தலைவனின் மகனான வீரபத்திரன் தான் போய் அந்த பயங்கர மிருகத்தைக் கொன்று வருவதாகக் கூறிவிட்டுக் கிளம்பி னான். அவன் பத்துப் பதினைந்து நாட்கள் அந்த பயங்கர மிருகம் வாழும் காட்டில் அலைந்து திரிந்து முடிவில் அது ஒரு ஓடைக்கரை யில் ஒரு புதரில் மறைந்து இருப் பதைக் கண்டான். உடனே அவன் அருகே இருந்த ஒரு மரத்தின் மீது ஏறி அங்கிருந்து அந்த மிருகத் தைப் பார்த்தான். அது மாதிரி பயங்கர மிருகத்தை அவன் அதற்கு முன் பார்த்ததே இல்லை.

வீரபத்திரன் அதனை எப்படிக் கொல்வது என்று யோசித்தான். அம்மிருகம் தலையை நிமிர்த்தி வீரபத்திரன் ஏறி இருந்த மரத்தைப் பார்த்துவிட்டது. அது உடனே பயங்கரமாக கர்ஜித்துக் கொண்டு புதரிலிருந்து வெளியே வந்து அந்த மரத்தின் கீழ்ப் போய் நின்றது.

வீரபத்திரன் அம்பை எய்ய, அது அதன் மார்பில் பட்ட்து.

அம்பு குத்தியதால் ஏற்பட்ட வலியால் அந்த மிருகம் பயங்கர மாகக் கத்திக் கிளையை நோக்கி எம்பிக் குதித்தது. அப்போது வீரபத்திரன் ஈட்டியை எடுத்து அதன் கழுத்திற்குக் குறி வைத்து எறிந்தான். ஈட்டியின் தாக்கு தலை சகிக்க முடியாமல் அது துடிதுடித்து விழுந்து இறந்து போயிற்று.

காலை ஆனது. அப்போது அந்தக் காட்டில் வசிக்கும் சில காட்டுவாசிகள் அவ்வழியே வந்தார்கள். அவர்கள் பயங்கர மிருகம் இறந்து விழுந்து கிடந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். காட்டுவாசிகளின் தலைவனின் மகன் வீரபத்திரன்தான் அதனைக் கொன்றவன் என்பதனையும் அவர்கள் அறிந்து கொண்டார்கள் இனி வீரபத்திரன் இளவரசி சித்திர லேகாவை மணப்பதோடு பாதி நாட்டை அடைந்து மன்னனாகவும் ஆவான் என எண்ணி அவர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள்..

காட்டுவாசியான ஒரு வாலிபன் தைரியத்தோடு போய் பயங்கர மிருகத்தைக் கொன்றுவிட்டான் என்ற செய்தி மன்னன் மானசிம்மனுக்குக் கிடைத்தது. பயங்கர மிருகம் ஒழிந்ததே என்று அவன் சந்தோஷப்பட்டான். ஆனால் அடுத்த நிமிஷமே அவன் மனம் வாட்டமுற்றது. ஏனெனில் வீரபத்திரனுக்கு எழுதப்படிக்கத் தெரியாது என்றும் உயர்குடியில் பிறந்தவர்





போல அல்லாமல் பண்பற்றவனாக இருப்பவன் என்பதனையும் அவன் அறிந்ததே அதற்குக் காரணம்.

போயும் போயும் தன் மகளான இளவரசியை ஒரு காட்டுவாசிக்கா கல்யாணம் செய்து வைப்பது என்று அவன் யோசிக்கலானான். படிப்பும் பண்பும் சற்றும் இல்லாத ஒருவனைத் தன் மாப்பிள்ளை எனப் பிறர்முன் கூறுவது தன் அந்தஸ்திற்குக் குறைவு என அவன் எண்ணினான். அவன் என்னவோ யாராவது ஒரு அரசகுமாரன்தான் தன் அறிவிப்பைக் கேட்டு வந்து பயங்கர மிருகத்தைக் கொல்வான் என்றும் அந்த அரசகுமாரன் தன் மாப்பிள்ளே பெருமைப் பட்டுக் கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தான். ஆனால் அப்படி நடக்கவில்லையே!

அவன் தன் மந்திரியையும் மகளையும் அழைத்து நிலைமையைக் கூறி என்ன செய்யலாம் என்று யோசனை கேட்டான். அவர்களும் இளவரசியை வீரபத்திரனுக்கு மணம் முடித்து வைப்பது கௌரவக் குறைச்சல் என்றே அபிப்பிராயப் பட்டார்கள்.

சித்திரலேகா தன் தந்தையிடம் "அப்பா! அந்த இளைஞனை தனிமையில் அழைத்துப் பேசி அவனுக்குப் பாதி நாடு மட்டுமே கொடுக்கப்படும் என்று சொல்லிப் பாருங்களேன். அதற்கு அவன் என்ன பதில் சொல்கிறான் என்பதை அறியலாம்" என்றாள்.

மந்திரியும் "ஆமாம். இது சரியான யோசனைதான். அவனுக்குப் பாதி நாட்டைக் கொடுப்பதாகக் கூறினால் அதனாலேயே சந்தோஷப்பட்டு விடுவான். ஆனால் இன்னொரு விஷயம். நாம் அவனைக் கொண்டே அவன் இளவரசியை மணக்கத் தகுதி பெற்றவன் அல்ல என்று காட்டுவாசிகளுக்கும் பொதுமக்களுக்கும் பகிரங்கமாக அறிவிக்கும்படி செய்ய வேண்டும். அப்போதுதான் நாம் சொன்ன சொல்லைக் காக்கவில்லை என்ற பழிக்கு ஆளாகாமல் இருப்போம்" என்றான்.

மானசிம்மனும் அவ்வாறே செய்வதாகக் கூறினான். அவன் வீரபத்திரனை வரவழைத்தான். உயரிய மரியாதைகளுடன் அவனை வரவேற்றான். அவன் தங்கத் தனி யாக விடுதியையும் ஏற்பாடு செய் தான். அதற்குபின் அவன் வீர பத்திரனைக் கண்டு பேசித் தன் நிலையை விளக்கினான்.

அதை கேட்ட வீரபத்திரன் சற்றும் தயங்காமல் "அரசே! எனக்கு நீங்கள் பாதி நாட்டைக் கூடக் கொடுக்க வேண்டாம். நான் எனக்கு ஏதோ பெரியதாகப் பரிசு கிடைக்கப் போகிறதே என்று ஆசைப்பட்டு அந்த பயங்கர மிரு கத்தைக் கொல்லவில்லை. அது மக்களை பயமுறுத்தித் துன்புறுத் திக் கொண்டிருந்தது. மக்கள் மன தில் தோன்றிய பயத்தைப் போக்கி அவர்களை நன்கு வாழச் செய் வது இந்நாட்டு வாசியான எனது கடமை என்று நினைத்தேன். அத னால் இந்தப் பாதி நாடும் அரச குமாரியும் எனக்கு வேண்டாம் என்றும் நான் இத்தகைய பரிசு களுக்காக ஆசைப்படவில்லை என் றும் எல்லோர் முன்னிலையிலும் கூறிவிடுகிறேன்" என்றான்.

அதைக் கேட்டு மன்னனும் மந்திரியும் பிரச்னை இவ்வளவு எளிதில் தீர்ந்து போயிற்றே என்று மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆனால் இளவரசி சித்திரலேகாவோ தன்



தந்தையிடம் "அப்பா! நீங்கள் இவருக்குப் பாதி நாட்டைக் கொடுத் தாலும் சரி அல்லது கொடுக்கா மல் போனாலும் சரி, அது பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் இவரைத்தான் மணந்து கொள் ளப் போகிறேன்" என்றாள்.

இதைக் கேட்ட மானசிம்மனும் மந்திரியும் திகைத்துப் போனார்கள்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "மன்னா! வீரபத்திரன் பாதி நாட்டையும் இளவரசியையும் அடைய ஆசைப்பட்டுத்தானே பயங் கர மிருகத்தைக் கொன்றான். அதே ஆசையோடுதானே மன்னனைக் காணவும் அரண்மனைக்கு வந் தான். ஆனால் மன்னன் தன் மகளை அவனுக்கு விவாகம் செய்து

வைக்க முடியாது எனக் கூறியது கேட்டு ஏன் தான் நாட்டையும் இளவரசியையும் அடைய ஆசைப் படாமல் அந்த பயங்கர மிருகத்தைக் கொன்றதாக ஒரு பொய்யைக் கூறினான்? முதலில் படிப்பு, பண்பற்றவன் எனக்கருதி அவனை மணக்க விரும்பாத சித்திரலேகா முடிவில் ஏன் அவனையே மணந்து கொள்ளப் போவதாக கூறினாள்? இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடைகளை நீ தெரிந்திருந்தும் அவற்றைக் கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகப் போய் விடும்'' என்றது.

அதற்கு விக்கிரமன் "மன்னன் மானசிம்மன் தான் சொன்ன சொல்லைக் காப்பதில்லை என்று முடிவு செய்துவிட்டான். இது மக்களை ஆளும் மன்னனுக்கு அழகல்ல. மேலும் வீரபத்திரன் தானாகவே அரசகுமாரியை விரும்பவில்லை என எல்லோர் முன்பும் சொல்ல வேண்டும் என மன்னன் வற்புறுத்தியது வீரபத்திரனின் மனதை உறுத்தியது. நாட்டை ஆள்வது தன்னால் இயலாது என நினைத்தே அவன் நாட்டோடு இளவரசியும் தனக்கு வேண்டாம் என அறிவிக்கத் தயாரானான். படிப்பும் பண்பும் இல்லாதவன் எனத் தான் கருதிய வீரபத்திரன் இவ்வளவு உயர்ந்த எண்ணங்களைக் கொண்டவன் எனச் சித்திரலேகா கண்டதும் மனம் மாறி அவனையே மணக்கப் போவதாகத் தன் தந்தையிடம் கூறினாள். அவளது இந்த முடிவு மிகவும் சரியானதே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக்கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக்கொண்டது.





# விமான விவகாரம்

மரகதபுரியின் மன்னன் மார்க்க சிம்மன். ஒருநாள் அவன் சிலபிர முகர்களுடன் தன் பூங்காவில் அமர்ந்து பேசிக் கொண்டிருந் தான். அப்போது திடீரென ஆகா யத்தைப் பார்த்து "ஓ! புஷ்பக விமானம் போகிறது போலத் தெரி கிறதே" என்றான்.

உடனேயே சந்திரஹாசன் என்ற பிரபு "ஆம் அரசே! புஷ்பக விமா னம்தான். தங்களது பார்வைதான் எவ்வளவு கூரானது!" என்றான். பிரபாகரன் என்ற மற்றொரு பிர முகன் "ஆம் சந்திரஹாசன் கூறி யது சரியே. தங்களைப் போன்ற புண்ணியவான்கள் இருப்பதால் தான் தங்களோடு சேர்ந்து நாங் களும் இது போன்ற அற்புதங் களைக் காண்கிறோம்" என்றான்.

இதுபோல மேலும் சில பிர முகர்கள் ஒத்து ஊதினார்கள். ஜால்ரா அடித்தார்கள். ஆனால் தட்சசீலத்தில் கல்வி பயின்று திரும்பி வந்திருந்த ஞானசாகரன் மட்டும் எதுவும் கூறாமல் இருந் தான். அவன் அரசாங்கப் புரோ கிதரின் மகன்.

அதை கவனித்த மார்க்கசிம் மன் "ஞானசாகரா! நீ மட்டும் ஏன் எதுவும் சொல்லாமல் இருக் கிறாய்?" என்று கேட்டார். ஞான சாகரனும் "அரசே! நானும் ஏதோ சொல்லத்தான். நினைக்கிறேன். ஆனால் அதைச் சொன்னால் தாங் கள் கோபித்துக் கொள்வீர்களோ என்று தான் பயப்படுகிறேன்" என்றான்.

மார்க்கசிம்மனும் "பயப்படாதே. நான் ஒன்றும் செய்யமாட்டேன். நீ சொல்ல விரும்பியதை தாராள மாகச் சொல்" என்றான். ஞான சாகரனும் "அரசே! ஆகாயத்தில்

—கி. சுதா—

புஷ்பக விமானம் பறக்கவில்லை. அது பறந்ததாகக் கூறுவது மனதில் ஏற்பட்ட பிரமைதான்'' என்றான். மன்னனும் ''இவ்வளவு பேர்கள் பார்த்ததாகக் கூறுகிறார்கள். ஆனால் நீ மட்டும் அதைப் பார்க்க வில்லை எனக்கூறி மனதில் ஏற் பட்ட பிரமை என்கிறாய். இதை விளக்கிக்கூறு'' என்றான்.

ஞானசாகரனும் ''நாம் புஷ்பக விமானம் பற்றி காவியங்களில் படித்திருக்கிறோம். அது கவிகளின் கற்பனை என்பது தங்களைப் போன்ற கற்றுணர்ந்தவர்கள் நன்கு அறிந்ததே. எனவே ஒரு வேளை தாங்கள் மன மயக்கத்தில் அத்தகைய விமானத்தைக் கண்டதாகக் கூறி இருக்கலாம். ஆனால் ஒரே சமயத் தில் இவ்வளவு பேரகளுக்கும் அத் தகைய மனப்பிரமை ஏற்பட்டு விட்டதாக நீங்கள் நம்பமாட்டீர் கள். இப்படி அவர்கள் தாங்கள் கூறியதை ஆமோதிப்பதற்கு என்ன காரணம் என்பது தங்களுக்கும் நன்கு தெரியும். அவர்களுக்கும் தெரியும்'' என்றான்.

அதைக்கேட்ட மன்னன் ''சபாஷ் ஞானசாகரா! நீ கூறியது சரியே. நான் எந்த விமானத்தையோ, அதில் கந்தர்வனையோ பார்க்க வில்லை. நாட்டில் தற்போது என்ன நடக்கிறது என்பதை அவ்வப்போது கண்டும் கேட்டும் அவற்றை அப் படியே எனக்குச் சொல்லி ஆலோ சனை கூறும் ஒருவரைத் தேர்ந் தெடுக்கவே இப்படி விமானத்தைக் கண்டதாகச் சொன்னேன். இந்த பொய்யை இவர்கள் பொய் என்று எடுத்துக் கூறாமல் என் ஆதரவை யும் பரிசுகளையும் எதிர்பார்த்து நான் சொன்னது உண்மை என்று கூறி என்னைப் புண்ணியவான் என்றும் புகழ்ந்தார்கள். நீயோ சற்றும் பயப்படாமல் உண்மையைக் கூறினாய். அதனால் உன்னைத் தான் என் அந்தரங்க ஆலோசக னாக நியமிக்கிறேன்'' என்றான் புன்னகை புரிந்தவாறே.



# அம்புலிமாமா அனுபந்தம்—40



## நம் தேசப்பறவைகளும், மிருகங்களும்:

# புலி

கம்பீரமான புலிகள் ஏராளமாக நம்நாட்டில் வங்காளத்து சுந்தர் வனப்பகுதியில் ஒரு காலத்தில் இருந்தன. காட்டிலுள்ள புலிகளால் மக்களுக்கு ஆபத்து எனக்கருதி அக்காலத்து மன்னர்கள் புலி வேட்டைக்குச் சென்று அவற்றை கொல்லத் தொடங்கினார்கள். சில மன்னர்கள் இந்த வேட்டையைப் பொழுது போக்காகவும் கொண்டார்கள். இப்படிப்பட்ட வேட்டைகளால் புலிகளின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து போயிற்று.

ஒரு காலத்தில் நம் நாட்டில் நாற்பதாயிரத்திற்கும் மேற்பட்டு புலிகள் இருந்தன. ஆனால் 1972ல் அவை இரண்டாயிரத்திற்கு வந்து விட்டன. அதனால் நம் அரசாங்கம் புலிகளைப் பாதுகாக்க தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டது. புலியை நம் தேசிய மிருகம் என அறிவித்தது. இதனால் தற்போது நம்நாட்டின் பலபகுதிகளிலும், மிருகக்காட்சி சாலைகளிலும் மொத்தம் நாலாயிரம் புலிகளுக்கு மேல் உள்ளன.

பூனை இனத்தைச் சேர்ந்தது புலி. இது உயிருள்ள எந்த மிருகத்தின் மீதும் பாய்ந்து அதனை தன் இரையாக்கிக் கொள்ளும். இதற்கு மான், காட்டுப்பன்றி என்றால் மிகவும் பிடிக்கும். பசுமையான அடர்ந்த காடுகளில் வசிக்கும் புலி எந்த உணவும் கிடைக்காத போது நீர் நிலைகளில் குதித்து அவற்றிலுள்ள மீன்களைப் பிடித்துத் தின்னும். தலையிலிருந்து வால்வரை ஒரு புலியின் நீளம் 8 - 9 அடிகளாம். சுமார் 200 கிலோ நிறையுள்ளது. ஒரு புலி 15-20 வருடங்கள் உயிர் வாழக்கூடியது.

# இளம் இசைக் கலைஞர்



சென்னை மாநகரில் கடந்த டிசம்பரில் நடந்த ஒரு இசை விழாவில் ஒரு அற்புதம் நிகழ்ந்தது. பனிரெண்டே வயதான சசாங்கன் என்ற சிறுவன் இரண்டு மணிநேரம் அற்புதமாகப் புல்லாங்குழல் வாசித்து ரசிகர்களை மெய்மறக்கச் செய்தான். இசை விழாக்களில் பொதுவாக மாலை நேரக்கச்சேரிகள் முதிர்ந்த வித்வான்கள் பாடுவதற்கே ஒதுக்கப்படும். இந்த மாலை ஆறுமணியிலிருந்து ஒன்பது மணிவரையான கச்சேரியை இந்த சிறுவனுக்கு ஒரு 'சபா' ஒதுக்கியது! அந்த சபை நிர்வாகிகள் எதிர்பார்த்தது போல அதிசயிக்கத்தக்க முறையில் சசாங்கன் குழல் இசைத்து சங்கீத ரசிகர்களின் பாராட்டுதல்களோடு விமர்சகர்களின் பாராட்டுதல்களையும் பெற்றான்!

சிறுவயதிலேயே சசாங்கன் இசையில் ஆர்வம் காட்டினான். சசாங்கனின் தந்தை திரு. சுப்பிரமணியமும் புல்லாங்குழல் வித்வானே. அவர் சில ராகங்களைக் குழலில் இசைக்கும் போது பாலகனான சசாங்கன் அவற்றை உன்னிப்புடன் கேட்கலானான். சில ராகங்களைக் கேட்டால் முகம் சுளிப்பான். மூன்று வயதாவதற்குள் இவன் 70 ராகங்கள் கேட்டு விட்டான். தன் மகன் இசையில் காட்டும் ஆர்வம் கண்டு அவர் அவனுக்கு அந்த வயதிலேயே இசை பயில்விக்கலானார். அவர் அவனுக்கு வயலின் கற்றுக் கொடுக்க விரும்பினார். ஆனால் சசாங்கன் புல்லாங்குழல் வாசிப்பதில்தான் ஆர்வம் கொண்டான். தன் தந்தை குழலில் எப்படி எல்லாம் விரல்களை வைத்து ஸ்வரங்களை இசைக்கிறார் என அவன் கவனித்து வந்ததே இதற்குக் காரணம்.

சசாங்கன் நன்கு இசை பயில வேண்டும் என நினைத்து அவனது குடும்பம் பெங்களூரிலிருந்து சென்னைக்கு வந்தது. இதற்காக சுப்பிரமணியம் தன் பெங்களூர் உத்தியோகத்தையும் விட்டு விட்டு வந்தார். அவர் அங்கு ஒரு கல்லூரி ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்.

சசாங்கனின் முதல் கச்சேரி ஆஸ்திரேலியாவிலுள்ள அடிலைட் நகரில் அரங்கேறியது. அங்கிருந்து இந்தியாவரும் வழியில் சிங்கப்பூரிலும் மலேயேசியாவிலும் இவனது கச்சேரிகள் நடந்தன. நம்நாட்டில் அவனது முதல் கச்சேரி 1990 செப்டம்பரில் பம்பாயில் நடைபெற்றது. இதன் பிறகு பல சபாக்களிடமிருந்தும் கலாசார அமைப்புகளிடமிருந்தும் இவனுக்கு அழைப்புகள் வரலாயின.

இவன் பள்ளிப் படிப்பில் அதிக நாட்டம் காட்டவில்லை. சிறுவனானதால் சில சமயங்களில் புல்லாங்குழலில் சாதகம் செய்யக் கூட முரண்டு பிடிப்பான். ஆனால் இவனது தந்தை நயத்தாலும் உருட்டி மிரட்டியும் வழிக்குக் கொண்டு வந்தாராம். சசாங்கன் மற்ற சிறுவர்களோடு விளையாடுவதைவிடத் தன் சகோதரியுடன் விளையாடுவதையே பெரிதும் விரும்பினான். சமயம் நேர்ந்த போதெல்லாம் அவன் ஆடியோ கேசட்டுகளைக் கேட்டும் வருகிறானாம்.

அந்தக் குடும்பமே சசாங்கனின் இசைக் கச்சேரிகளிலிருந்து கிடைக்கும் வருமானத்தில் வாழ்ந்து வருகிறது என்றால் அது ஆச்சரியப்படவேண்டிய விஷயம் தானே!

# உங்களுக்கு தெரியுமா?

1. ஐ. நா. சபையின் முதலாவது பொதுச் செயலாளர் யார்?
2. 'காமன் வெல்த் நாள்' எப்போது கொண்டாடப்படுகிறது?
3. பண்டித ஜவாஹர்லால் நேரு எந்த சிறையில் இருந்த போது 'டிஸ்கவரி ஆப் இந்தியா' என்ற நூலை எழுதினார்?
4. 'தி லேடி ஆப் தி லாம்ப்' எனப்புகழ் பெற்ற பெண்மணி யார்?
5. நபிகள் நாயகத்தின் தாய் தந்தையர் யாவர்?
6. பறக்கும் தட்டுகளை முதன் முதலில் எப்போது பார்த்ததாகக் கூறப்பட்டது?
7. ஏசு சிலுவையில் அறையப்படுமுன் தன் எந்த சீடரிடம் தன் தாய் மேரியைக் கவனித்துக் கொள்ளும்படிக் கூறினார்?
8. 'ஓல்ட் டெஸ்டமெண்டி'ல் நோவா பாட்டனாராகக் குறிப்பிடப்பட்டவர் யார்?
9. சந்திரனில் முதன் முதலாக இறங்கிய இயந்திரம் எது?
10. மாவோ சேதுங் எப்போது சீனக்குடியசை நிறுவினார்?
11. 'அட்லாண்டிஸை'த்தன் நூலில் வர்ணித்தவர் யார்?
12. முதன்முதலில் ஆகாயவிமானத்தைச் செலுத்திய ரைட் சகோதரர்களின் தொழில் என்ன?
13. இத்தாலி நாட்டுப் பெண்டாக்டர் தம் துறையில் அல்லாது வேறு துறையில் புகழ் பெற்றார். அவர் யார்?
14. எந்த அமெரிக்க நடிகையின் படம் முதல்முதலில் அமெரிக்காவில் தபால்தலையில் வெளியிடப்பட்டது?
15. கிரிக்கெட்டை தேசிய விளையாட்டாக அறிவித்த நாடு எது?

## விடைகள்

1. ட்கிக்வீ லீ
2. மே 2
3. அகம்மது நகர் கோட்டை
4. பிளாரன்ஸ் நைட்டிங் கேல்
5. அப்துல்லா, அமீனா
6. 1947 ஜூன் 24
7. ஜான்
8. மெதலேனா
9. ரஷ்யா அனுப்பிய லூனா-2 1959 செப்டம்பர் 13
10. 1949 செப்டம்பர் 21
11. கிரேக்கத் தத்துவ ஞானி ப்ளேடோ
12. சைகிள் கடை
13. மரியா மாண்டிசோரி, கல்வித்துறை
14. கிரேஸ் கெல்லி.
15. ஆஸ்திரேலியா.

# பிஞ்சு மனம் இளகியது!



அண்மையில் உத்திரப்பிரதேசத்தில் ஏற்பட்ட நிலநடுக்கத்தால் பெருத்த சேதம் ஏற்பட்டது. பாதிக்கப்பட்டவர்களின் துயர்துடைக்க ஏற்படுத்தப்பட்ட பூகம்ப நிவாரண நிதிக்குப் பலர் நன்கொடை அளித்தனர். சீனநாட்டு யாவ் செங்ஷி என்ற சிறுவன் இந்த நிதிக்கு ரூ. 600 நன்கொடை அளித்திருக்கிறான். இவனுக்கு வயது பத்தே. அவன் இந்தத் தொகையைச் சீன நாணயத்தில் தன் தந்தை வாயிலாக பெய்ஜிங்கிலுள்ள இந்திய தூதரகத்தில் சேர்ப்பித்தான். ஒரு தொலைக் காட்சி தொடர் நாடகத்தில் இவன் நடித்துப் பெற்ற பணத்தில் இது பாதித் தொகை. மற்ற பாதியை இவன் தன் நாட்டில் வெள்ள நிவாரண நிதிக்கு முன்னதாகவே அளித்து விட்டானாம்.

# அம்புலிமாமா செய்திகள்

## பசிபிக் கடலில் படகுப் பயணம்

"ஒரு நிமிடம் ஒரு மணியாகவும் ஒரு மணி ஒரு நாள் போலவும் தோன்றியது" எனக் கூறினார் துடுப்புப் படகில் ஜப்பானிலிருந்து பசிபிக் கடலைக் கடந்து அமெரிக்க மேற்குக் கரையை அடைந்த பிரெஞ்சுக்காரர் ஜெரார்டு டி அமோவில் இவரது வயது 41. இவர் தனது 3 மீட்டர் படகில் ஜப்பானிலிருந்து ஜூலை 11ந் தேதி கிளம்பி 10,000 கிலோ மீட்டர் தூரத்தை 133 நாட்களில் கடந்து நவம்பர் 2ந்தேதி அமெரிக்க மேற்குக் கரையில் இல்வா கீஸி என்ற இடத்தை அடைந்தாராம். அப்போது இவரது உடல் தளர்ந்த போதிலும் மனம் சற்றும் தளரவில்லை.





# எருதின் புண்

திருப்பூரில் திருமலை என்ற பணக்காரரர் இருந்தார். அவர் பல நிறுவனங்களின் அதிபர். எவ்வளவோ பேர் அவரிடம் வேலை செய்து வந்தார்கள். ஆனால் அவர்களது கஷ்ட நஷ்டங்களைத் தெரிந்து கொள்ளாமல் அவர் கசக்கிப் பிழிந்து அவர்களிடம் வேலை வாங்கினார். அவர்களும் வேறு வழியின்றி பொறுமையுடன் வேலை செய்தார்கள். எருதின் புண்ணைப் பற்றி காக்கை கவலைப்படாமல் கொத்திக் கொண்டுதானே இருக்கும். அப்படித்தான் திருமலையும்.

அவரது மனைவி லட்சுமிக்கும் அவரது மகன் மணியனுக்கும் அவரது இந்த குணம் பிடிக்கவில்லை. அவர்கள் திருமலையின் இந்தப் போக்கை மாற்ற முயன்றும் முடியாது போனார்கள்.

திருமலையிடம் ஒரு அழகான குதிரை வண்டி இருந்தது. அவர் தினமும் அந்த வண்டியில் ஊருக்கு வெளியே தான் அமைத்த ஒரு அலுவலகத்திற்குப் போய் வருவார். அவர் அந்த வண்டியையும் அதில் பூட்டப்படும் குதிரையையும் மிகவும் அக்கரையுடன் கவனித்து வந்தாரேயொழிய அதனைப் பல வருஷங்களாக ஓட்டி வரும் கிழவன் குப்புசாமியைப் பற்றிக் கவலைப் படவே இல்லை.

அவரது வெளிப்புற அலுவலகத்திற்குப் போகும் வழியில் ஒரு பள்ளம் இருந்தது. அடர்ந்த மரங்கள் கொண்ட அந்த இடத்தின் வழியே இருட்டியபின் யாரும் வர மாட்டார்கள். ஏனெனில் அந்தப் பள்ளத்தில் திருடர்கள் வழிப்போக்கர்களைத் தாக்கிக் கொள்ளை அடித்தது பலமுறை நிகழ்ந்தது.

—சிவனார் செல்வன்—




தொலைவிலுள்ள தம் அலுவலகத்தைக் காட்ட ஒருநாள் திருமலை தன் மனைவியையும் மகனையும் தன்னோடு குதிரை வண்டியில் அழைத்துச் சென்றார். காலையில் போய்விட்டுத் திரும்பும் போது நடுப்பகலாகிவிட்டது வண்டிக்காரக் கிழவன் காலையிலிருந்து எதுவும் சாப்பிடாததால் வண்டி ஓட்டி வரும்போது பசி மயக்கத்தில் தலைசுற்றி வண்டியிலிருந்து கீழே விழுந்து விட்டான். குதிரை கட்டுக்கடங்காமல் வண்டியோடு ஓடி ஒரு மரத்தில் மோதி நின்றது.

வண்டியிலிருந்து மூவரும் கீழே இறங்கினார்கள். வண்டியில் சில சாமான்கள் வேறு இருந்தன. இப்போது என்ன செய்வது என்று மணியன் கேட்டான்.

திருமலையோ "ஆளுக்கு ஒன்றாக நாமே எடுத்துக் கொண்டு நடக்க வேண்டியதுதான். எப்படியாவது இருட்டுவதற்குள் இங்கிருந்து போய்விட வேண்டும்" என்றான். மூவரும் வண்டியில் வைக்கப்பட்டிருந்த அலுவலகச் சாமான்களைத் தூக்கித் தலை மீது வைத்துக் கொண்டு நடந்தார்கள்.

கால்மணி நேரம் நடந்தபின் லட்சுமி "அடடா! வண்டிக்காரக் குப்புசாமியை கவனிக்காமல் வந்துவிட்டோமே" என்றாள். திருமலையோ "இப்போது அவனைப் பற்றி எல்லாம் கவலைபட வேண்டாம். நாம் நம் வீட்டை அடைந்த பின் யாரையாவது அனுப்பி அவனைக் கூட்டிவரச் செய்யலாம்" என்றான் சிடுசிடுப்பாய்.

மேலும் கொஞ்ச தூரம் போனதும் சுள்ளென்று அடித்த வெயிலால் மூன்று பேர்களும் களைத்துப் போனார்கள். அவர்களால் மேலும் அடி எடுத்து வைக்கக்கூட முடியவில்லை. திருமலை அங்கேயே உட்கார்ந்து "ஒரே தாகமாய் இருக்கிறது. யாராவது தண்ணீர்க் கூஜாவை வண்டியிலிருந்து எடுத்து வந்தீர்களா? என்று கேட்டான். "இல்லையே" என்று லட்சுமியும் மணியனும் கூறினார்கள்.

அப்போது தான் திருமலையின் மனக்கண்முன் தான் வேலைக் காரர்களை வெயிலில் வாட்டி வேலை வாங்கியது கொடூரம் தோன்றியது. அப்போதுதான் அவருக்குத் தான் கவனியாமல் விட்டு வந்த குப்புசாமியின் நினைவு வந்தது. உடனே அவர் எழுந்து தன் வண்டி இருந்த இடத்தை நோக்கிச் சென்றார்.

அப்போது மணியன் "நீங்கள் தண்ணீருக்காக வண்டிக்குப் போக வேண்டாம். நான் போய் கூஜாவை எடுத்து வருகிறேன். நீங்கள் இங்கேயே இருங்கள்" என்றான். திருமலையோ "நான் தண்ணீருக்காக அங்கே போகவில்லை. வண்டியிலிருந்து மயக்கமடைந்து கீழே விழுந்த குப்புசாமியைப் பார்க்கவே போகிறேன். நீயும் வா. அவனை எடுத்து வண்டியில் போட்டுக் கொண்டு ஊருக்குள் போய் வைத்தியரிடம் அவனைக் காட்டலாம். இவ்வளவு நாட்களாக நான் பிறரிடம் மனிதாபிமானம் என்பதே இல்லாமல் நடந்து வந்தேன். இன்று நடந்த இந்த சம்பவம் எனக்கு நல்ல ஒரு படிப்பினையைத் தந்து விட்டது. எருதிற்குத்தானே தன் புண்ணின் வலி தெரியும். அதைக் கொத்தித் தின்னும் காக்கைக்குத் தன் உணவைப் பற்றிய கவலை தானே ஒழிய எருதின் வலியைப் பற்றி நினைக்காது. அந்தப் பழமொழியின் பொருள் முழுவது மாக இப்போதுதான் எனக்குப் புரிகிறது" என்றார்.

அவர்கள் கொஞ்ச தூரம் போன



துமே தம் எதிரே குப்புசாமி குதிரை வண்டியை ஓட்டிக் கொண்டு வருவதைப் பார்த்தார்கள். திருமலை முன்னே ஓடி "குப்புசாமி! இப்போது எப்படி இருக்கிறது உன் உடல்நிலை? உடம்பு சரி இல்லாத போது நீ ஏன் வண்டியை ஓட்டிக் கஷ்டப்பட வேண்டும்?" என்று கூறினார்.

குப்புசாமியோ "என் உடம்புக்கு என்ன! பசிமயக்கத்தில் நினைவு இழந்து விழுந்து விட்டேன். இப்படி நிகழ்வது எனக்கு சகஜமே. இன்றுதான் நீங்கள் நேரில் நான் இப்படி விழுந்ததைக் கண்டீர்கள். என்னால் நீங்கள் கொஞ்ச தூரம் நடந்து போகும் சிரமம் உங்களுக்கு ஏற்பட்டு விட்டதே" என்றான்.

அதைக் கேட்டுத் திருமலையின் மனம் நெகிழ்ந்தது. அவர் குப்புசாமியின் முதுகில் இலேசாகத் தட்டியவாறே "சரி, முதலில் வண்டிக்குள் இருக்கும் கூஜாவை எடு. தண்ணீர் குடிக்க வேண்டும்" என்றார். குப்புசாமியும் அதனை எடுத்துக் கொடுக்கவே திருமலை 'மடக்' மடக்கென்று நீர் குடித்துவிட்டு "உனக்கு நான் சிரமம் கொடுத்து விட்டேன். இவ்வளவு நாட்களாக நான் என் வேலையாட்களின் கஷ்ட நஷ்டங்களைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப் படாமல் இருந்து விட்டேன். இன்றுதான் அவை எப்படிப்பட்டவை என்று உணர்ந்தேன்" என்றார்.

அதன்பிறகு அவர்கள் மூவரும் வண்டியில் ஏறிக் கொண்டனர். வண்டியும் ஊருக்குள் அவர்களது வீட்டை அடைந்தது. அன்றிலிருந்து திருமலை தன் வேலைக்காரர்களிடம் கனிவுடன் நடந்து அவர்களுக்குப் பல வசதிகளைச் செய்து கொடுத்தார். அவர்களும் "எங்கள் எஜமானனைப் போலத் தங்கமான மனிதர் இந்த உலகில் எங்கே இருக்கிறார்?" என்று போற்றிப் புகழ்ந்தார்கள்.



# உபதேசம் ஏற்றான்!

**கா**ட்டினருகே இருந்த ஒரு கிராமத்துக் குடியானவன் தன் வேலையை முடித்து விட்டு வீட்டிற்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். அப்போது நெருங்கி வளர்ந்திருந்த இரு மரங்களின் அடிப்பகுதிகளிடையே ஒரு புலி சிக்கிக் கொண்டு பயங்கரமாக உறுமிக் கொண்டிருப்பதைக் கண்டான். அந்தப் புலி அங்கிருந்து விடுபட்டுத்தன் மீது பாயுமுன்பே அதைத்தன் கோடாலியால் தாக்கிக் கொன்று விட நினைத்தான்.

புலியைப் பிடித்தால்தானே அது முடியும் என்று எண்ணி அவன் சென்று புலியின் பின்னங்கால்கள் இரண்டையும் பலமாகப் பிடித்து விட்டான். அப்போது தான் அவனுக்குத்தன் கோடாலியை எடுக்க முடியாதே என்பது தெரிந்தது.

அப்போது அவ்வழியே ஒரு சன்னியாசி வந்தார். அவன் அவரிடம் "ஐயா! நிலைமையைப் பார்த்தீர்களா? நான் புலியைப் பிடித்துக் கொண்டே இருக்கிறேன். நீங்கள் என் கோடாலியை எடுத்து இந்தப் புலியைக் கொன்று விடுங்கள்" என்றான். அவரோ "ஐயோ! நான் எந்தப் பிராணியையும் என் கையால் கொல்ல மாட்டேன். அது மகாப்பாவம்" என்றார்.

அப்போது குடியானவன் "அப்படியானால் நீங்கள் இதன் இருகால்களையும் பிடித்துக் கொள்ளுங்கள். நான் என் கோடாலியால் புலியை அடித்துக் கொன்று விடுகிறேன். பாவம் என்னையே சேரட்டும்" என்றான். சன்னியாசியும் அதற்குச் சம்மதித்துப் புலியின் பின்னங்கால்கள் இரண்டையும் பிடித்துக் கொண்டார். குடியானவன் கோடாலியுடன் அங்கிருந்து கிளம்பிச் செல்லலானான்.

அப்போது சன்னியாசி அவனிடம் "என்ன இது! புலியைக் கொல்லாமல் போகிறாயே" என்று கத்தினார். குடியானவனும் "ஐயோ, பிராணிகளை நாம் கொன்றால் பாவம் என்று நீங்கள் கூறியது என்மனதில் நன்கு பதிந்து விட்டது. அதை உங்களது உபதேசமாக ஏற்று இந்தப் புலியைக் கொல்லாமல் போய் விடுகிறேன். அந்தப் பாவம் எனக்கு வேண்டாம்" என்று கூறிவிட்டு அங்கிருந்து வேகமாகப் போய் விட்டான்.





# குருவும் சீடனும்

வீரேந்திர மன்னன் தன் இரு மகன்களான விஜயனையும் அஜயனையும் புகழ்பெற்ற ஞானப்பிரகாசர் என்ற குருவிடம் கல்வி கற்க அனுப்பத் தீர்மானித்தான். விஜயன் எதையும் சட்டெனப் புரிந்து கொள்ளக் கூடியவன். ஆனால் அஜயன் மந்த புத்தி படைத்தவன்.

மன்னன் ஞானப்பிரகாசரைக் கண்டு தன் மகன்களைப் பற்றிக் கூறவே அவரும் தமக்கு மிகவும் வயதாகி விட்டதால் அவர்களுக்குக் கல்வி புகட்ட இயலாது என்றார். ஆனால் தன் இரு சீடர்கள் தனித் தனியே ஆசிரமங்கள் அமைத்து மாணவர்களை ஏற்பதால் அவர்களிடம் அரசகுமாரர்களை அனுப்புமாறு கூறினார்.

மன்னனும் ஞானப்பிரகாசர் குறிப்பிட்ட இரு சீடர்களில் ஒருவரான விவேகசூடன் என்பவரைக் கண்டு தன் மகன்களைப் பற்றிக் கூறவே அவரும் "நான் யாரையும் என் மாணவனாக ஏற்குமுன் ஒரு தேர்வு நடத்துவேன். அதில் அவன் தேறினாலே என் மாணவனாக முடியும். இதற்குச் சம்மதமானால் உங்கள் மகன்களை அனுப்புங்கள்" என்றார்.

அதற்கு மன்னன் சம்மதியாமல் ஞானப்பிரகாசர் குறிப்பிட்ட இன்னொரு சீடரான வாணிதாசன் என்பவனைக் கண்டு தன் மகன்களை பற்றிக் கூறினான். வாணிதாசனும் "ஒரு ஆசிரியர் மந்த புத்தியுள்ள மாணவனுக்கு கல்வி புகட்டி அவனை புத்திசாலி ஆக்க வேண்டும். அப்போதுதான் அவர் திறமைசாலியாவார். நான் யார் என்னிடம் கல்வி கற்க வந்தாலும் அவனைப் பரீட்சிக்காமலேயே என் மாணவனாகச் சேர்த்துக் கொள்

—வி. லாவண்யா—

வேன்'' என்றான்.

வீரேந்திரன் அரண்மனை திரும்பியதும் தன் மந்திரியை அழைத்து ''இந்த விவேகசூடனின் கர்வத்தை அடக்கி அவனை தண்டிக்க வேண்டும். என் மகன்களுக்கு தேர்வு நடத்தி அதில் தேர்ந்தாலே அவர்களைத் தன் மாணவர்களாக ஆக்கிக் கொள்ள முடியும் என்று கூறி விட்டான். என்ன திமிர்'' என்று உறுமினான்.

மன்னனின் மனநிலையைப் புரிந்து கொண்ட மந்திரியும் ''நாம் நாட்டில் கல்வி புகட்டும் ஆசிரியர்களுக்கு ஒரு போட்டி நடத்துவோம். அதில் வாணிதாசன் மிக எளிதில் விவேகசூடனை தோற்கடித்து விடுவான். இந்த அவமானமே கர்வம் பிடித்த விவேகசூடனுக்குச் சரியான தண்டனை'' என்றான். மந்திரியின் யோசனைப் படி மன்னன் தன் நாட்டிலுள்ள எல்லா ஆசிரியர்களையும் அழைத்து போட்டி நடத்தினான். அப்போட்டியில் விவேகசூடனே முதலாவதாக வந்தான்.

அது கண்டு மன்னன் ஆச்சரியப்பட்டு விவேகசூடனிடம் ''இவ்வளவு கெட்டிக்காரரான நீங்கள் ஏன் அகம்பாவம் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான். விவேகசூடன் பணிவுடன் மன்னனை வணங்கி ''படித்தவர்கள் கர்வம் கொள்ளக்கூடாது. நான் உங்களிடம் வேண்டுமென்றே கர்வம் கொண்டவன் போல நடித்தேன். அதனால் உங்கள் அகம்பாவம் தலைதூக்கி இப்படி ஒரு



பரீட்சைக்கு என்னை அழைப்பீர்கள் என்று எதிர்பார்த்தேன். நான் மெத்தப் படித்தவன் என்று நானே சொல்லிக் கொள்வதைவிட அதை உங்கள் பரீட்சையே நிரூபித்து விட்டது'' என்றான்.

மன்னனும் அதுகேட்டு மகிழ்ந்து "நீங்கள் கர்வம் கொண்டவர் அல்ல என்று இப்போது தெரிந்து விட்டது. இப்போதாவது என் மகன்களைப் பரீட்சிக்காமல் உங்கள் மாணவர்களாக ஏற்றுக் கொள்வீர்களா?'' என்று கேட்டான். அதற்கு விவேகசூடனும் "அரசே! தங்கள் மகன்களுக்குத் தேர்வு தேவை இல்லை என்று தாங்கள் கருதினால் அவர்களை வாணிதாசனிடமே அனுப்புங்கள்'' என்றான்.

மன்னனுக்குக் கோபம் வந்தது. அப்போது விவேகசூடன் சிரித்தவாறே "குருவின் திறமைக்கும் அவர் பயின்ற படிப்பிற்கும் சம்பந்தமே இல்லை. நான் குருகுலத்தில் படித்ததைக் கொண்டு திருப்தி அடையாமல் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டேன். அதற்காகத்தான் தக்க மாணவர்களை நான் தேர்ந்தெடுக்கிறேன். அவர்கள் நான் கற்பிப்பதைக் கேட்டுத் திருப்தி அடையாமல் என்னிடம் பல கேள்விகளைக் கேட்கிறார்கள். அவற்றால் நானும் பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்கிறேன். இதனால் அவர்கள் அறிவோடு என் அறிவும் பெருகுகிறது. ஒருவிதத்தில் இந்த மாணவர்களே என் ஆசிரியர்களாகிறார்கள்'' என்றான்.

புத்திசாலியான மாணவர்களால் ஆசிரியரின் அறிவு முதிர்கிறது என்பதை மன்னன் அப்போது புரிந்து கொண்டான். அதனால் அவன் விஜயனை விவேகசூடனிடமும் அஜயனை வாணிதாசனிடமும் கல்வி பயில அனுப்பினான்.






நளன் கூறியபடி பாலம் கட்டு மாறு இராமர் கட்டளை இட்டார். வானரர்கள் பல இடங்களுக்குப் போய் பெரிய பெரிய கற்களை எடுத்து வந்து போடலானார்கள். மரங்களை ஒடித்து எடுத்து வந் தார்கள். கற்களையும் மரக்கிளை களையும் கடலில் போட்டு பாலம் அமைக்கலானார்கள்.

பாலத்தின் அளவும் மேற்பரப் பும் சீராக இருக்கக் கயறுகள் கட்டுப் பட்டு அவற்றின் இடையே கற்கள் பரப்பப்பட்டன. அந்தப் பாலத்தின் அகலம் பத்து யோசனை. நீளமோ நூறு யோசனைகள் தினமும் இரு பது யோசனைகள் வீதம் வேலை செய்து ஐந்து நாட்களில் பாலத்தை நளன் தயார் செய்து விட்டான்.

வானரர்கள் பாலம் வெற்றிகரமா கக் கட்டி முடிக்கப்பட்டதால் அதன் மீது ஆடிப்பாடித் திரிந்தார்கள்.

நல்ல பாதையாக அப்பாலம் அமைந்து விட்டதால் வானரப் படைகள் மிக எளிதில் கடலைக் கடந்து இலங்கையின் கரையை அடைந்தார்கள்.

இராமரும் இலட்சமணனும் பாலத்தின் மீது கால் வலிக்க நடந்து செல்லக் கூடாது எனச் சுக்கிரீவன் கண்டிப்பாகக் கூறிவிட்டான். அத னால் அனுமார் இராமரையும் அங் கதன் இலட்சுமணனையும் தம் தோள்களில் உட்கார வைத்துத் தூக்கிக் கொண்டு சென்றார்கள். அவர்களும் பாலத்தின் மீது நடந்து செல்லாமல் ஆகாயவழியே சென்று

—இலங்கைக்குள் வானரசேனை—



இலங்கைக் கரையை அடைந்தார்கள். வானரர்கள் வேறுசிலரும் உற்சாக மிகுதியால் ஆகாய வழியில் போய் இலங்கைக் கரையை அடைந்தார்கள்.

இலங்கைக்கரையில் பல பழ மரங்களைக் கண்டு வானரர்கள் அவை இருந்த பகுதிக்குச் செல்ல விரும்பினார்கள் ஆனால் இராமரோ வானரப்படை இலங்காபுரிக்குச் செல்ல வேண்டும் எனக்கட்டளை இட்டார். அவர் முன்னே செல்ல வானரர்கள் அவர் பின்னால் உற்சாகத்துடன் சென்றார்கள்.

வானரர்கள் இலங்கை நகரக் கோட்டை வாசலை அடைந்த போது உள்ளிருந்து பேரிகை முழக்கமும் தப்பட்டைகள், சத்தமும் இராட்சஸர்களின் கூச்சலும் கேட்டன. அது கேட்டு வானரர்கள் அவை அடங்கும் விதத்தில் உரக்கக் கூச்சலிட்டார்கள். இலங்கை நகரைப் பார்த்ததுமே இராமர் அங்கு சிறை வைக்கப் பட்டிருக்கும் சீதையை எண்ணி வேதனைப்படலானார். இலட்சுமணனும் அவரோடு சேர்ந்து இலங்கை மாநகரைப் பார்க்கலானான்.

இலங்கையில் பல மாளிகைகளில் பல வண்ணக்கொடிகள் பறந்து கொண்டிருந்தன. இராமர் படைகள் எவ்வாறு அமைந்து செயல்பட வேண்டும் எனக் கூறலானார். ரிஷபன் வலப்புறத்திலும் கந்தமாதனன் இடதுபுறத்திலும் இராமரும் இலட்சுமணனும் முன்புறம் நடுவிலும் இருந்து படைகளை நடத்தத் திட்டமிட்டார்கள். சுக்கிரீவன் படைகளின் பின்புறம் இருந்து திடீர்த் தாக்குதல் நடந்தால் சமாளிக்க நின்றான். இப்படியாக வானரப் படைகள் கருடவியூகத்தில் அமைந்தன.

இராமர் சுக்கிரீவனிடம் "நீ பிடித்து வைத்திருக்கும் இராவணனின் தூதனான சுகனை விடுதலை செய்," என்றார். விடுதலை அடைந்த சுகன் ஓடிப்போய் இராவணனைக் கண்டு "நான் அக்கரைக்குப் போய் சுக்கிரீவனிடம் நீங்கள் சொல்லச் சொன்னதை அப்படியே சொன்னேன். வானரர்கள் உடனே ஆத்

திரப்பட்டு என்னைப் பலவிதத்திலும் துன்புறுத்தினார்கள் அவர்களிடமிருந்து நான் எதையும் தெரிந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் கடலில் பாலம் கட்டி கடலைக் கடந்து இப்போது இலங்காபுரியின் வாசலுக்கு வந்து விட்டார்கள். எங்கு பார்த்தாலும் வானரங்களும் கரடிகளுமாகத்தான் தென்படுகின்றன. இந்த நிலையில் போர் நடந்தே தீரும். அதைத் தவிர்க்க வேண்டுமானால் தாங்கள் சீதையை இராமரிடம் ஒப்படைத்தால்தான் முடியும்'' என்றான்.

அதைக் கேட்ட இராவணன் கோபம் கொண்டான். இடி இடிக்கும் குரலில் ''என்ன சொன்னாய்? சீதையை இராமனிடம் ஒப்படைப்பதா? முப்பத்து முக்கோடி தேவர்களும் திரண்டு வந்தாலும் அவர்களை எதிர்ப்பேனேயொழிய சீதையை இராமனிடம் ஒப்படைக்க மாட்டேன். நீண்ட நாட்களாகவே போர்புரிய என் தோள்கள் துடித்துக் கொண்டிருக்கின்றன. என்னைப் பற்றி அறியாமல் இந்த இராமன் என் மீது போர் தொடுக்கிறான். என் ஒரு தாக்குதலை அவனால் சமாளிக்க முடியுமா?'' என்று கூறினான்.

பிறகு அவன் தன் மந்திரிகளான சாரணனையும் சுகனையும் பார்த்து ''கடலின் மீது பாலம் அமைப்பது இயலாத செயல். நான் இதை நம்ப மாட்டேன். நீங்கள் இரகசியமாகப் போய் இது உண்மையா என்றும் வானரப் படைகள் மிகப் பெரிதா என்றும் கண்டு வாருங்கள். எதிரியின் அஸ்திர, சஸ்திரங்களைப்





பற்றி விவரங்களையும் அறிந்து வாருங்கள்" என்று சொல்லி அனுப்பினான்.

அவர்கள் இருவரும் வானரர்கள் போல உருமாறி வானரப் படைகளுக்கிடையே போய்ப் புகுந்தார்கள். அவர்களால் அங்குள்ள வானரர்களைக் கணக்கிட முடியவில்லை. எங்கு பார்த்தாலும் ஒரே வானரர்கள். மேலும் வானரர்கள் பாலத்தின் வழியே வந்து கொண்டிருந்தார்கள்.

இதற்குள் விபீஷணன் வானரர் உருவில் வந்த சாரணனையும் சுகனையும் அடையாளம் கண்டு கொண்டு விட்டான். அவன் இராமரிடம் அவர்களைக் காட்டி "இவர்கள் இராவணனின் மந்திரிகள் சுகன், சாரணன் என்பது இவர்களது பெயர்கள், ராட்சஸர்களான இவர்கள் வானர உருவில் இங்கு வந்து நம் படை பலத்தை அறிய முயல்கிறார்கள்" என்றான்.

அப்போது அவர்கள் இருவரும் இராமரை வணங்கி விபீஷணன் கூறியது உண்மையே என்று ஒப்புக் கொண்டார்கள். இராமரும் புன்னகை புரிந்தவாறே "எம் படைகளை நன்றாகப் பாருங்கள். எல்லா விவரங்களையும் தெரிந்து கொண்டு போங்கள். வேண்டுமானால் உங்களை அழைத்துப் போய் எம்படைகளை முழுவதுமாகக் காட்ட விபீஷணரிடம் சொல்கிறேன். உங்களிடம் எவ்வித ஆயுதமும் இல்லாததால் உங்களை யாரும் கொல்ல மாட்டார்கள்" என்றார்.

அவர் விபீஷணனிடம் அவர்களை விட்டு விடும்படிச் சொல்லி "நீங்கள் போய் இராவணனிடம் நாளையே அவன் என் அஸ்திர மகிமையைக் காணலாம் என்று சொல்லுங்கள்" என்று சொல்லியும் அனுப்பினார்.

சுகனும் சாரணனும் இராமரை வணங்கி விட்டு இராவணனிடம் போய் "மாறு வேடத்தில் போன எங்களை விபீஷணன் கண்டு பிடித்து இராமனிடம் ஒப்படைத்தான். இராமர் எங்களிடம் கருணை காட்டி விடுதலை செய்தார். வானரப் படைபலமானது. இராமர்,

இலட்சுமணன், சுக்கிரீவன், விபீஷணன் ஆகியோர் இருக்க அதன் சக்தியைப் பற்றிக் கூறவும் வேண்டுமா? கடல் கடந்து வந்த வானரப்படையின் அளவை என்ன என்று சொல்வது! வானரர்களும் போர் புரியத் தயாராக இருக்கிறார்கள். எனவே போரைத் தவிர்த்து சீதையை இராமரிடம் ஒப்படைப்பதே நல்லது" என்றார்கள்.

இராவணனோ "முடியாது. சீதையை எக்காரணம் கொண்டும் ஒப்படைக்க மாட்டேன். நீங்களெல்லாம் தொடை நடுங்கிகள். வானரப் படையைக் கண்டு பயந்து விட்டீர்கள். என்னைப் போரில் யாரால் வெல்ல முடியும்?" என்று இறுமாப்புடன் கூறினான்.

ஆனால் இராவணன் மனதிலும் வானரப் படைகளைப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. அவன் தன் அரண்மனையின் மேல்தளத்திற்குப் போய் நின்று சுற்றிலும் பார்த்தான். கோட்டைக்கு வெளியே எங்கு பார்த்தாலும் வானரர்களே இருப்பதை அவன் கண்டான். அவன் தன்னருகே நின்ற சாரணனிடம் "இந்தப் படையில் மிகமுக்கியமான வீரர்கள் யார்? சுக்கிரீவனுக்கு ஆலோசனை கூறுபவர்கள் யார்?" என்று கேட்டான்.

சாரணனும் "நீலன் என்பவன் படைகளின் தலைவன். அங்கதன் கிஷ்கிந்தையின் இளவரசன். அவன் வாலியின் மகன். தன் தந்தையைப் போலவே பலம் கொண்டவன். அனுமாரைப் பற்றித்தான் நாம் நன்கு அறிந்திருக்கிறோமே. கடலில்





பாலம் அமைத்தவன் நளன். அவனை வெல்வது எளிதல்ல. சுவேதன் என்ற மற்றொரு வானரவீரன் மிகுந்த பலசாலி. அதோ இருப்பவன் குமுதன். அவனும் யாருக்கும் சளைத்தவன் அல்ல. ஈவிரக்கம் இல்லாமல் எதிரிகளை அடித்து வீழ்த்தும் மகா பராக்கிரமசாலி'' என்றான்.

இத்துடன் நில்லாமல் அவன் மேலும் சரபன், ரம்பன் போன்ற மற்றும் பல வானர வீரர்களைப் பற்றியும் கூறினான். வானரப் படைகளைத் தவிர ஜாம்பவான் தலைமையில் இயங்கும் மாபெரும் கரடிப்படையின் பலம் பற்றியும் அவன் இராவணனுக்கு எடுத்துக் கூறினான்.

சுகனும் தான் வானரப் படை பற்றி அறிந்த விவரங்களை எடுத்துக் கூறினான். அங்கிருந்தபடியே அனுமாரின் பக்கம் நின்று கொண்டிருந்த இராமரையும் இலட்சுமணனையும் அவன் இராவணனுக்குச் சுட்டிக் காட்டினான். இராவணன் அப்போது அவர்களோடு சேர்ந்து தன் தம்பி விபீஷணன். இருப்பதையும் கண்டான். அப்போது அவன் ஆத்திரம் அதிகரித்தது.

அவன் சுகனிடமும் சாரணனிடம் ''போதும் போதும் நீங்கள் எதிரிகளைப் புகழ்ந்தது. உங்களைப் போன்ற மந்திரிகள் இருந்தால் நான் போரில் எப்படி வெற்றி பெற முடியும்? இதுவரை நீங்கள் செய்த உதவிகளை நினைத்து இப்போது உங்களை எதுவும் செய்யாமல் விட்டு வைக்கிறேன். போங்கள் என் முன்னிருந்து'' என்று கூறி அவர்களை அனுப்பி விட்டான்.

அதன் பிறகு அவன் மகோதரனிடம் ''சில ஒற்றர்களை நீ அனுப்பி எதிரியின் படைபலம் பற்றி அறிந்து வரச் செய்'' என்றான். அந்த ஒற்றர்களும் மாறு வேடத்தில் சுவேல பர்வதத்திற்குச் சென்றார்கள். அங்கு தான் இராமரும் இலட்சுமணனும் வானரப்படைகளை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தார்கள். அந்த மாபெரும் படையைக் கண்டதுமே அவர்கள் கதிகலங்கிப் போனார்கள். அப்போது விபீஷணன் வேறு

அவர்களைப் பார்த்துப் பிடித்தும் விட்டான்.

அந்த ஒற்றர்களில் சார்த்தூலன் என்பவன் துடுக்கானவன். அதனால் அவனைப் பிடித்த வானரர்கள் அவனை அடித்துக் குத்தி உதைத்த னர். இராமர் குறுக்கிட்டு அவனை யும் சார்த்தூலனையும் மற்ற ஒற்றர் களையும் விடுதலை செய்து போகச் சொன்னார். அவர்களும் தப்பினோம் பிழைத்தோம் என்று ஓடினார்கள்.

சார்த்தூலன் இராவணனைக் கண்டு "இராமரைப் பற்றி அறிவது மிக எளிதே. நான் விபீஷணனின் ஆட்களிடம் அகப்பட்டு விட்டேன். என்னை வானரர்கள் துன்புறுத்த முயல்கையில் இராமர் குறுக்கிட்டு என்னை ஒன்றும் செய்யாமல் விட்டு விடும்படி அவர்களிடம் கூறினார். அதனால்தான் உயிர்தப்பி இங்கு வர முடிந்தது. இலங்கையை முற் றுகையிட வானரப்படை தயாராகிக் கொண்டிருக்கிறது. போரா அல்லது சீதையை இராமரிடம் ஒப்படைத்து அவருடன் சமாதானம் செய்துக் கொள்வதா என்பதை நீங்கள்தாம் தீர்மானிக்க வேண்டும்" என்றான்.

இராவணனோ சீதையை இரா மரிடம் ஒப்படைப்பது என்ற பேச் சிற்கே இடம் இல்லை என்று கூறி னான். அவன் சார்த்தூலனிடம் மேலும் விசாரித்து வானரப் பிர முகர்களைப் பற்றித் தெரிந்து கொண் டான். அதற்குப் பின் அவன் வித் யுத்ஜிஹ்வன் என்ற இராட்சஸனை அழைத்துக் கொண்டு சீதை இருக் கும் இடத்திற்குச் சென்றான்.

இராவணன் அவனிடம் "நீ உன் மாயா ஜாலத்தால் இராமரின் தலையை உருவாக்கு அதோடு ஒரு பெரிய வில்லையும் சீதையிடம் காட்டி அவளை ஏமாற்றலாம்" என் றான். அந்த ராட்சஸனும் அப்படியே செய்வதாகக் கூறவே இராவணன் மகிழ்ந்து போய் அவனுக்குத் தான் அணிந்திருந்த முத்துமாலை எடுத் துப் பரிசாக அளித்தான்.






# அவரே என் கணவர்!

சீன நாட்டில் வெகு காலத்திற்கு முன் ஒரு பணக்காரன் இருந்தான். அவனுக்கு அழகான மகள் ஒருத்தி இருந்தாள். அவள் மிகவும் புத்திசாலி. நன்கு படித்தவள். அதனால் அவளை மணக்கப் பல பணக்கார வாலிபர்கள் விரும்பினார்கள். அப்படி வந்த சில வாலிபர்களை அந்தப் பெண்ணின் தந்தை பரீட்சித்து அவர்கள் தகுதியற்றவர்கள் எனக் கூறி அனுப்பிவிட்டான்.

ஒருமுறை மூன்று பணக்கார வாலிபர்கள் அப்பெண்ணை மணக்க வந்தனர். பெண்ணின் தந்தையும் அந்த மூவரையும் பரீட்சீத்துப் பார்த்து மூவருமே தன் மகளை மணக்கத் தகுதி பெற்றவர்கள் எனக் கண்டான். அதனால் யாரைத் தேர்ந்தெடுப்பது எனத் திகைத்து அந்தப் பொறுப்பைத் தன் மகளிடமே விட்டு விட்டான்.

அந்தப் பெண்ணும் யாரைத் தேர்ந்தெடுப்பது என யோசிக்கலானாள். நாட்கள், வாரங்கள் எனக் கழிந்து கொண்டே இருக்க அவளால் அந்த மூவரில் யாரைத் தேர்ந்தெடுப்பது என்ற முடிவைக் காண முடியவில்லை. இதற்குள் அவள் கடும் நோய் வாய்ப்பட்டு இறந்து போனாள்.

இதைக் கண்டு அந்த மூன்று வாலிபர்களும் மிகவும் துக்கப்பட்டார்கள். அவர்கள் அப்பெண்ணின் தந்தைக்கு ஆறுதல் கூறினார்கள். பின்னர் அவர்களில் ஒருவன் அப்பெண்ணின் உடலை ஒரு பெட்டியில் போட்டு பத்திரப்படுத்தி அதனைப் புதைத்து அந்த இடத்தில் ஒரு சமாதியைக் கட்டி இரவும் பகலும் அதனருகில்

—சீன நாட்டுப் பழங்கதை—



அமர்ந்து அவள் நினைவாகவே இருக்கலானான்.

இன்னொருவனோ அப்பெண்ணின் தந்தையிடம் "நான் தங்கள் மகளின் நினைவாகத் தங்களோடு இருந்து தங்களுக்குப் பணி புரிகிறேன்" என்று கூறி அப்பணக்காரன் வீட்டிலேயே தங்கி அவனை நன்கு கவனித்து வரலானான்.

மூன்றாவது வாலிபனோ விரக்தி அடைந்து சன்னியாசியாகிப் பல ஊர்களுக்கு போய் அங்குள்ள பண்டிதர்களைக் கண்டு அவர்களோடு பேசி தன் மனதைத் தேற்றிக் கொள்ளலானான். இப்படிச் சென்ற போது அவன் ஒரு ஊரில் ஒரு மகாபண்டிதரின் வீட்டை அடைந்தான். அவர் நன்கு படித்தவர் என்பதையும் பல அற்புத சக்திகள் பெற்றவர் எனவும் அவன் அறிந்தான்.

அந்தப் பண்டிதரும் சன்னியாசியான வாலிபனை வரவேற்று அவன் கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் சரியான பதில்களைக் கூறி அவனது சந்தேகங்களை எல்லாம் போக்கினார். பிறகு அவனைத் தன்னோடு சாப்பிடவும் அழைத்தார்.

இருவரும் சாப்பிட அமர்ந்திருக்கையில் பண்டிதரின் பத்து வயதான மகன் அங்கு வந்து தந்தையிடம் தனக்கு ஏதேதோ வேண்டும் என்று கூறி அவற்றை வாங்கித் தருமாறு நச்சரிக்கலானான். பண்டிதரும் ஆகட்டும் என்று கூறியும், விடாமல் அச்சிறுவன் நச்சரிக்கவே அவர் கோபம் கொண்டு அவனைத் திட்டியதோடு நில்லாமல் அச்சிறுவனைத் தூக்கி எரியும் அடுப்பில் போட்டுவிட்டார்.

இந்த இரக்கமற்ற செயலைக் கண்ட வாலிப சன்னியாசி "உங்களை நான் மகாபண்டிதர் என நினைத்தேன். ஆனால் உங்களது இந்த ராட்சஸ செயலைக் கண்டு உங்களது உண்மை சொரூபம் என்ன என்று தெரிந்துவிட்டது" என்றான்.

பண்டிதரோ புன்னகை புரிந்து "மனிதர்களின் இயல்பை அவர்களது கோபத்தாலும், பேச்சாலும் நடத்தையாலும் கண்டு கொண்டு

விடலாம் என்பது உண்மையே. ஆனால் என் விஷயத்தில் நீ தவறு செய்கிறாய். ஒரு அற்ப விஷயத்தால் நீ இப்படித் தவறு செய்வது சரியல்ல'' என்றார்.

சன்னியாசியோ "ஒரு சிறுவனை நெருப்பில் போட்டு எரிப்பதா அற்ப விஷயம்?'' எனக் கோபத்தோடு கேட்கவே பண்டிதரும் அமைதியாக ஏதோ ஒரு மந்திரத்தைப் பலமாக உச்சரித்து நெருப்பை நோக்கிக் கைதட்டினார். மறுநிமிடம் அடுப்பில் போடப்பட்ட அவரது மகன் உயிர் பெற்று வெளியே வந்து சிரித்தவாறே தன் தந்தையைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

இதைக்கண்ட சன்னியாசி மிகவும் வியப்படைந்தான். அவன் பய பக்தியுடன் பண்டிதரின் கால்களில் விழுந்து வணங்கித் தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். பிறகு அவன் பண்டிதர் கூறிய மந்திரத்தைத் தன் மனதிற்குள்ளாகவே சொல்லிப் பார்த்து நினைவில் வைத்துக் கொண்டான். அதன் பிறகு அவன் பணக்காரனின் ஊருக்குச் சென்று அவனது மகள் அடக்கம் செய்யப்பட்ட சமாதிக்குச் சென்றான்.

அவன் சமாதிமுன் நின்றுதான் பண்டிதர் வீட்டில் கற்ற மந்திரத்தை உச்சரித்தான். மறுநிமிடமே பணக்காரனின் மகள் உயிர் பெற்று முன் எப்படி அழகாக இருந்தாளோ அப்படியே வெளியே வந்தாள். தன் மகள் உயிர்பெற்று எழுந்து வந்தது கண்டு பணக்காரன் அவனிடம் நடந்ததை எல்லாம் கூறினான். பிறகு



அவன் தன் மகளிடம் "நீ இன்னமும் தாமதிக்காமல் இந்த மூவரில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து மணந்து கொள்" என்றான்.

அப்போது சமாதிக்கருகே இரவும் பகலுமாக உட்கார்ந்திருந்தவன் "நான்தான் இவளது உடலைப் பாதுகாத்தேன். எனவே இவளை மணக்க நானே தகுதி பெற்றவன்" என்றான். பணக்காரனுக்கு சேவை செய்தவனோ "நான்தான் இவளை மணக்கத் தகுதி பெற்றவன்" என்றான்.

சன்னியாசியான வாலிபனோ "என் தயவால்தான் இவள் பிழைத்தாள். ஆகையால் இவளை மணக்க முற்றிலும் தானே தகுதி பெற்றவன்" என்றான். இதை எல்லாம் கேட்ட பணக்காரன் தன் மகளிடம் "இவர்கள் சொல்வதை எல்லாம் கேட்டாயல்லவா? நீயோ புத்திசாலி. எனவே நீயே இவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அப்படிச் செய்ததற்கான காரணத்தையும் மற்றவர்களுக்குக் கூறு" என்றான்.

அந்தப் பெண்ணும் "என் தந்தையையும் வீட்டையும் கவனித்துக் கொண்டு வந்தவர் என் தந்தைக்கு மகன் போலாவார். எனவே அவர் எனக்குச் சகோதருக்குச் சமம். சன்னியாசியாகி மந்திரம் கற்று வந்தவரோ அவர் தயவால் நான் பிழைத்ததாகக் கூறியதால் அவர் என்பால் இரக்கம் மட்டுமே கொண்டார் என்றாகிறது. எனவே இந்த இருவரையும் நான் மணக்க முடியாது. என் சமாதியருகே என்னையே இரவும் பகலும் நினைத்து உட்கார்ந்திருந்த வாலிபர்தான் என் மீது அன்பு கொண்டவர். எனவே அவரைத்தான் நான் மணப்பது சரியாகும்" என்றாள்.

இந்த விளக்கம் பணக்காரருக்கும் மற்ற இருவாலிபர்களுக்கும் திருப்தியையே அளித்தது. பணக்காரன் தன் மகள் விரும்பியபடியே விவாகத்தை விமரிசையாக நடத்தி வைத்தான்.






# அதற்கைத அதற்று!

சதானந்தர் மகாவித்வான். அவருக்கு ஏராளமான சொத்து இருந்தது. அதனால் அவருக்கு வாழ எவ்விதக் கஷ்டமும் இல்லை. அதனால் அவர் தமக்குப் பிடித்த மானவர்களைச் சீடர்களாக்கிக் கொண்டும் ஏழை எளியவர்களுக்கு உதவியும் வந்தார். அவரை அந்நாட்டு மன்னன் மிகவும் மதித்து வந்தான்.

ஒருநாள் கலாதரன் என்ற கவிஞன் தான் எழுதிய காவியத்தை அந்நாட்டு மன்னனிடம் வாசித்துக் காட்டினான். அப்போது மன்னன் "நீயும் ஏதோ கொஞ்சம் படித்திருப்பதாகத் தெரிகிறது. ஆனாலும் நீ எழுதியதை இவ்வூரிலுள்ள மகாவித்வான் சதானந்தரிடம் காட்டித் திருத்திக்கொண்டு வந்து என்னைப் பார்" என்று கூறி அனுப்பினான்.

கலாதரனும் சதானந்தரைக் கண்டு தன் காவியத்தைக் காட்டினான். அவரும் அதனை வாங்கிக் கொண்டு அதைப் படித்துவிட்டு திருத்தம் செய்ய வேண்டி இருந்தால் செய்து அவனுக்கு அனுப்புவதாகக் கூறி அனுப்பினார். அவர் அதனைப் படித்து ஆங்காங்கு திருத்தி நான்கு நாட்களுக்குப் பின் அதனை கலாதரனுக்கு அனுப்பி வைத்தார்.

கலாதரன் தன் காவியத்தில் சதானந்தர் செய்த மாற்றங்களைக் கண்டு முகம் சுளித்தான். அவன் உடனே அவரது வீட்டிற்குப் போய் "நீங்கள் செய்த மாறுதல்களால் என் காவியத்தின் முக்கிய கருத்தே அடிபட்டுப் போயிற்றே. இதனால் நான் கூற விரும்பியது மாறியதோடு இது என் காவியம் அல்ல என்றும் ஆகிவிட்டதே"

— சந்தியா கிருஷ்ணன் —



என்று கூறினான்.

அதுகேட்டு சதானந்தர் சிரித்த வாறே "தம்பீ! நீ நிறையப் படித் திருக்கிறாய். அதனால் பல கருத்துக் களை இதில் திணித்திருக்கிறாய். உனக்கு எழுதுவதில் போதிய அனுப வம் இல்லாததால் எந்தக் கருத்தை முக்கியமாக வலியுறுத்த வேண்டும் என்பது உனக்குத் தெரியவில்லை. அதனால் நீ வலியுறுத்த நினைத்த கருத்து பொருத்தமில்லாமல் இருக் கிறது. அதனால்தான் மன்னன் உன் காவியத்தை என்னிடம் காட்டித் திருத்திக் கொண்டு வரும்படி அனுப் பினார். உன் காவியத்தைத் திருத்தி நீ கூறிய கருத்துக்களில் ஒன்றைத் தான் முக்கியமானதாக்கி இருக்கி றேன். நீ மன்னனிடம் பரிசைக் கோரி வந்தாய். அவர் உன்னை என்னிடம் அனுப்பி திருத்தச் சொன்னதால்தான் இவ்வாறு செய் தேன்" என்றார்.

அப்போது கலாதரன் "ஐயா! என் காவியத்தை உங்கள் மனம் போன போக்கில் மாற்றியது சரியா?" என்று கர்வத்தோடு கேட்டான்.

சதானந்தரும் "நான் செய்த திருத்தத்தால் உன் காவியத்தை பாராட்டினால் அப்போதும் அது உன் காவியம்தானே யொழிய என்னுடையது அல்ல. நீ கூறிய வேறொரு கருத்திற்கு நான் முத லிடம் அளித்துத் திருத்தினேன். உன் மன வேதனை போக வேண்டு மானால் அதற்கு ஒரு வழி உள்ளது. உன்னிடம் உன் வயதிற்கும் அனு பவத்திற்கும் மிஞ்சி நீ அகம் பாவம் கொண்டிருக்கிறாய். வாழ்க் கையில் எதையாவது செய்துகாட்ட வேண்டுமானால் அதற்கு ஒருவன் தன் சக்தியையே நம்ப வேண்டும். வீணாக நான் என்ற அகம்பாவம் கொள்ளக்கூடாது. நீ ஏதாவது மகத்தான சாதனை புரிந்திருந் தால் அது பற்றிப் பெருமைப்பட்டு கொள்ளலாம். ஆனால் நீ இப்போது அந்த நிலையில் இல்லை. அதனால் தான் உனக்கு நான் சொல்வது நீ அகம்பாவத்தை விட்டொழிக்க வேண்டும் என்பதே" என்றார்.

அப்போது கலாதரன் "ஐயா!

நான் கொண்டுள்ள தன்னம்பிக் கையை நீங்கள் அகம்பாவம் என்று தவறுதலாகப் புரிந்து கொண்டிருக் கிறீர்கள்'' என்றான். அப்போது சதானந்தர் ''உன்னிடம் தன்னம் பிக்கை இல்லை. அப்படி இருந் திருந்தால் மன்னன் கூறியபடி இந் தக் காவியத்தை என்னிடம் எடுத்து வராமல் வேறொரு மன்னனிடம் சென்றிருப்பாய்'' என்றார்.

''இனிமேல் அப்படியே செய் கிறேன். அப்போதாவது நீங்கள் என்னைப் பாராட்டுவீர்களா?'' என்று கேட்டான் கலாதரன். சதா னந்தரும் ''மாட்டேன். நீ அகம் பாவம் கொண்டே அப்படிச் செயல் படுகிறாய் எனக் கருதுவேன். தன் னம்பிக்கை என்பதன் பொருள் நான்தான் உயர்ந்தவன் என்பதல்ல. என்றாவது ஒருநாள் நானும் உயர் வேன் என்ற நம்பிக்கை கொள்வது தான்'' என்றார்.

கலாதரன் வேறு எதுவும் கூறா மல் தன் காவியத்தை எடுத்துப் போய் மன்னனுக்கு வாசித்துக் காட்டினான். அப்போது மன்னன் காவியம் நன்றாக இருக்கிறது என்று பாராட்டினான். அது கேட்டு கலா தரன் சதானந்தர் செய்த திருத்தம் பற்றிக் கூறி ''அவர் இதனைத் திருத் தியதால்தான் தாங்கள் இதனைப் பாராட்டுகிறீர்கள். அந்தத் திருத் தங்களே இதனை உயர்ந்த காவிய மாக்கி விட்டன'' என்றான்.

மன்னன் கலாதரனின் அடக் கத்தைக் கண்டு மகிழ்ந்து பல விலையுயர்ந்த பரிசுகளை அளித் தான். கலாதரன் அகம்பாவத்தை விட்டொழித்ததால் எதையும் ஆழ்ந்து சிந்திக்கலானுன். அதனுல் அவனது அறிவு முதிர்ச்சி பெற்றது. தன்னிடம் உள்ள குறைகளையும் அவனே கண்டு அவற்றைத் திருத் திக் கொள்ளவும் ஆரம்பித்தான். இதனால் அவன் புகழ் நாடெங் கிலும் பரவி மகாவித்வான் என்ற பெயரையும் மக்களிடையே பெற்று விட்டான்.





# சிந்தித்தீர்களா!

வெகு காலத்திற்கு முன் விதர்ப்ப நாட்டை விவேகசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது தர்பாரில் ஞானமணி என்ற மாபெரும் சோதிடர் இருந்தார். அவர் கூறும் ஜோஸ்யமும் ஆரூடமும் அப்படியே பலித்ததால் அவருக்கு சற்று கர்வம் அதிகமாகவே இருந்தது.

ஒருநாள் அவர் ஆற்றில் குளித்து விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த போது ஒரு காக்கை அவர் மீது எச்சம் இட்டு விட்டது. அதனால் கோபம் கொண்ட அவர் "என் மீதா எச்சம் இட்டாய்? உன்னை மட்டுமல்ல, உன் இனத்தையே ஒழித்து விடுகிறேன்" என்று சபதம் செய்தார்.

அவர் தன் சபதத்தை நிறைவேற்ற தக்க சமயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஒருநாள் அரண்மனைக்குச் சற்று தூரத்திலிருந்த ஒரு குடிசைமுன் ஒரு கிழவன் கொஞ்சம் தானியத்தை வெய்யிலில் வைத்து காயவைத்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு கழுதை அதன் மீது நின்று தன் வாயையும் அதில் வைத்து விட்டது. அதைக் கண்ட கிழவன் கோபம் கொண்டு அதனைப் பிடித்து அதன் வாலில் ஓலைகளைச் சுருட்டி அதில் நெருப்பும் வைத்து விட்டான். கழுதை பயந்து ஓடி அரண்மனையிலுள்ள யானைக் கொட்டத்தில் புகுந்தது.

நெருப்பைக் கண்ட யானைகள் பிளிறியவாறே அந்தக் கொட்டத்திலிருந்து வெளியே ஓடி வந்தன. அவை மோதிக்கொண்டும் நெருப்பில் பட்டும் படுகாயப்பட்டன. அவற்றை. மாவுத்தார்கள் பிடித்து

—பவானி சங்கரன்—

அடக்குவதற்குள் போதும் போது மென்றாகிவிட்டது.

யானைகளின் காயங்களை ஆற்ற மிருக வைத்தியர்கள் என்னென்னவோ தைலங்களையும் களிம்புகளையும் தடவிப் பார்த்தார்கள். ஆனால் காயங்கள் ஆறவில்லை. ஒரு நாள் மன்னன் பேச்சுவாக்கில் தன் ஆஸ்தான சோதிடனான ஞானமணியிடம் யானைகளின் காயங்கள் ஆறாதது பற்றிக் கூறினான். இதுதான் காக்கைகளை ஒழிக்க சரியான சந்தர்ப்பம் எனக் கண்டு ஞானமணியும் "அரசே! இதற்கு காக்கைக் கொழுப்பை எடுத்துத் தடவினால் போதும் காயங்கள் ஆறிவிடும்" என்றான்.

மன்னனுக்கு ஞானமணி கூறியது சரி எனப்பட்டது. அதனால் அதிக செலவும் இல்லை. காக்கைகளைக் கொன்று அவற்றிலிருந்து கொழுப்பை சேகரிக்க வேண்டியதுதான். அவ்வளவு யானைகளின் காயங்களுக்கும் தடவ நிறையக் கொழுப்பு வேண்டுமே. அதனால் நாட்டிலுள்ள காக்கைகளை எல்லாம் கொன்று அரண்மனையில் கொண்டு வந்து போடுமாறு நாடு முழுவதிலும் பறை சாற்றுவித்தான்.

அவ்வளவுதான்! நாட்டில் எல்லோரும் காக்கை வேட்டையில் ஈடுபட்டார்கள். ஆயிரக்கணக்கில் காக்கைகள் கொல்லப்பட்டு அரண்



மனையில் கொண்டு வந்து குவிக்கப்பட்டன. மன்னனின் இந்தச் செயல் காக்கை மன்னனுக்கு மிகுந்த துயரத்தை அளித்தது. அதனால் அது மன்னனைக் கண்டு பேசத் தீர்மானித்துக் கொண்டது.

அந்தக் காக்கை மன்னன் நேராகப் பறந்து தர்பார் மண்டபத்துள் போய் மன்னனின் சிம்மாசனத்தின் பக்கத்தில் உட்கார்ந்தது. அதைக் கண்ட மன்னனின் வீரர்கள் அந்தக் காக்கையைப் பிடிக்க முயன்றார்கள். மன்னன் அதனை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று தடுத்தான்.

அப்போது காக்கை மன்னன் மனிதர்கள் பேசுவது போலவே மன்னனிடம் "மன்னா! தாங்கள் கோபப்

படாமல் பொறுமையுடன் நான் சொல்வதைக் கேட்க வேண்டும். ஒரு மன்னன் பிறர்கூறும் யோசனையை ஏற்று அதைச் செயலாக்கு முன் அதுபற்றி நன்கு சிந்திக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் கண் மூடித்தனமாக அந்த யோசனைப் படி நடந்தால் பலருக்குப் பல கஷ்ட நஷ்டங்கள் ஏற்படும். உங்கள் ஆஸ்தான சோதிடர் வைத்தியத்திற்கு காக்கைக் கொழுப்பு வேண்டும் என்றார். நீங்களும் காக்கையின் உடலிலிருந்து கொழுப்பு எடுக்க காக்கைகளை எல்லாம் கொன்று குவிக்கும்படிக் கூறிவிட்டீர்கள். உண்மையில் காக்கையின் உடலில் கொழுப்பே கிடையாது. உங்களுக்கு இந்த யோசனை கூறியது அவர் ஏதோ ஒரு கெட்ட நோக்கம் கொண்டுதான்'' என்றது.

அதுகேட்டு மன்னன் ஆச்சரியப்பட்டு "அப்படியா? காக்கையின் உடலில் கொழுப்பு இல்லாமல் போவதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டான். காக்கை மன்னனும் "மனிதர்கள் காக்கைகளின் எதிரிகள். அதனால் அவை எப்போதும் பயந்து கொண்டே இருக்கின்றன. பயப்படும் ஒரு பிராணியின் உடலில் எப்படி கொழுப்பு இருக்கும்?'' என்று கேட்டது.

அப்போதுதான் மன்னனுக்கு உண்மை தெரியலாயிற்று. உடனே அவன் காக்கைகளை யாரும் கொல்லக்கூடாது என்று கட்டளை இட்டான். ஞானமணியை நெருக்கிப் பிடித்து விசாரித்து அவன் காக்கை மீது கொண்ட வெறுப்பு ஏன் எனத் தெரிந்து கொண்டான். கெட்ட யோசனை கூறிப் பல காகங்களைக் கொல்ல வைத்த அந்த சோதிடனை மன்னன் பதவியிலிருந்தே நீக்கி விட்டான். அதுமட்டுமல்ல. காக்கைக்கு தினமும் தான் சாப்பிடும் முன் சாதம் வைக்கும்படியும் கட்டளை இட்டான். அந்தப் பழக்கம் இன்றும் எல்லோரிடம் இருந்து வருகிறது.



# இயற்கை விநோதங்கள்

## கங்காருவின் வால்!

ஆஸ்திரேலியாவிலுள்ள கங்காரு என்ற ஒருவகைப் பிராணி சாதாரணமாக எல்லா மிருகங்களைப் போல நடக்காமல் தாவித்தாவிச் செல்லும். ஒரு தாவில் அது 30 அடி தாண்டிவிடும். இவ்வாறு குதிக்க அது தன் வாலைத் தரையில் ஊன்றி உயர எம்புகிறது. வால் உயர்ந்து நின்றால் கங்காருவால் தாவமுடியாது.





## யானை காட்டும் குறி!

யானைகள் கூட்டம் கூட்டமாகத்தான் திரியும். யானைக் கூட்டத்திற்கு வழிகாட்ட ஒரு யானை மட்டும் சற்று முன்னதாகச் சென்று ஆபத்து எதுவும் இல்லை எனக் காட்ட நடந்து கொண்டே இருக்கும். ஆபத்து இருந்தால் அது தன் துதிக்கையை உயர்த்தும். உடனே மற்ற யானைகள் எச்சரிக்கை அடையும். முன்னதாகச் செல்லும் யானை செய்யும் சைகையை மற்ற யானைகள் எப்படிப் புரிந்து கொள்கின்றன என்பது இன்னமும் புரியாத புதிராக உள்ளது.

## முள்ளம் பன்றி

எலி இனத்தைச் சேர்ந்த முள்ளம் பன்றியின் உடல் சாம்பல் நிறத்தில் உறுதியான முட்கள் போன்ற ஈர்க்குகளைக் கொண்டிருக்கும். இத்தகைய ஈர்க்குகள் சுமார் 30,000 வரை இருக்கும். இந்த ஈர்க்கு மெல்லிய குழாய் போல இருப்பதால் இதில் எழுதும் மையை நிரப்பி பேனா போல எழுதவும் உபயோகிக்கிறார்கள். உடலில் உள்ள ஈர்க்குகளில் காற்று நிறைந்திருப்பதால் முள்ளம்பன்றி நீர்நிலைகளில் எளிதில் மிதந்து நீந்தியும் செல்கிறது.




चन्दामामा
चांदोबा
CHANDAMAMA

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 மே மாத இதழில் வெளியிடப்படும்**



T. C. Jain



S. B. Prasad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மார்ச் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : அடையப் போவதால் களிப்பு

இரண்டாவது போட்டோ : அடைபட்டதால் திகைப்பு

பரிசு பெற்றவர் : ஜி. ரம்யா, காரைக்குடி-2

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.



Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

---

**Statement about ownership of AMBULIMAMA (Tamil)**
**Rule 8 (Form VI), Newspapers (Central) Rules, 1956**

| | |
|---|---|
| *1. Place of Publication* | 'CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *2. Periodicity of Publication* | MONTHLY<br>Ist of each calender month |
| *3. Printer's Name* | B.V. REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *4. Publisher's Name* | B.VISWANATHA REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Chandamama Publications<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *5. Editor's Name* | B.NAGI REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | 'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *6. Name and Address of individuals who own the paper* | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS:<br>1. Sri B. VENKATRAMA REDDY<br>2. Sri B.V. NARESH REDDY<br>3. Sri B.V. SANJAY REDDY<br>4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI<br>6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA<br>8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA(Minor)<br>(Minor admitted to the benefits of Partnership)<br><br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |

I, B Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

*2nd March 1992*

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*